கே துணி பொருள் என்னும் - தனக்கே உரியதென்று நிச்சயிக்கப்பட்ட பொருள் என்று சொல்லும்; சதுர் முகத்தோன்-நான்குமுகத்தவனுன பிரமன், எனக்கே சமைந்த அபிடேகம் என்னும்-எனக்கே உரியதாகஅமைந்த கிரீடமென்று சொல்வான்; இமையவர் தாம்-மற்றைத்தேவர்கள் தாங்கள், மனம் கேதம் மாற்றும் மருந்து என்ப - (தங்கள்) மனத்திலுள்ள(அறியாமையாகிய) நோயைத் தீர்க்கும் மருந்து என்று சொல்வார்கள்; சூடும் மலர் என்பன் யான்-யான் தலையின்மேற் சூடும் பூவென்றுசொல்வேன்; (எ-று.)

இது, பலபடப்புனேவணி; வடநூலார் உல்லேகாலங்காரம் என்பர். ஒருபொருளைப் பலர் பலதன்மைகளினுலே பலபொருளாகச் சொல்லுதல், இதன் இலக்கணம். தனக்கே, எனக்கே,ஏ-பிரிநிலே. அபிஷேகம்-வடசொல். "சில்லரிக் கிண்கிணி மென்தெய்வமலர்ச் சீறடியைத், தொல்லே மணிமுடி மேற்சூட்டினுன்" என்றபடி ஊடல்தணிக்குங்காலத்துக் கணவன் மனைவியின் பாதத்தை முடிமேற் கொள்வதோர் இயைபுபற்றி, பிரமன் அதனை அபிஷேக மென்பானுயினுன். மநஃ கேதம்-வடமொழித்தொடர். கேதம் - துன்பம். என்ப - பலர்பால் முற்று; என் - இடைச்சொற் பகுதி, ப - விகுதி; இதுவே எதிர்காலங் காட்டும். கசம், கேசபங்க்தி என்ற வடசொற்றொடர்கள் விகாரப்பட்டன. கேசபந்தி - மயிரொழுங்கு. (கஅ)

கசு. கமலந்தனிலிருப்பாள் விருப்போடங்கரங்குவித்துக்
கமலங்கடவுளர்போற்றுமென்பூவைகண்ணிற்கருணைக்
கமலந்தனைக்கொண்டுகண்டொருகாற்றங்கருத்துள் வைப்பார்
கமலங்கழிக்குங்கலேமங்கையாரணிகாரணியே.

(இ - ள்.) கமலந்தனில் இருப்பாள்-தாமரைமலரில் வீற்றிருப்பவளும், கடவுளர் - தேவர்கள், விருப்போடு - விருப்பத்துடனே, அம் கரம் கமலம் குவித்து-அழகிய கைகளாகிய தாமரைமலர்களைக் கூப்பி[அஞ்சலிசெய்து], போற்றும் - துதிக்கின்ற, மென் பூவை - மென்மையான கிளிபோன்றவளும், ஆரணி - வேதங்களின் சொரூபமாயிருப்பவளும், காரணி - (எல்லாவற்றிற்கும்) காரணமாயிருப்பவளும்(ஆகிய), கலே மங்கை - கலேமகள்,—ஒரு கால் தம் கருத்துள் வைப்பார் கம் மலம் - (தன்னை) ஒருமுறை தமது மனத்தினுள் வைத்துத் தியானிப்பவர்களுடைய அறிவின்குற்றங்களை,—கண்ணில் கருணை கமலந்தனை கொண்டு கண்டு- (தனது) திருக்கண்களினின்று வெளியாகிற அருள்வெள்ளத்தைக்கொண்டு (அவர்களைக்) கடாக்ஷித்து, கழிக்கும்-போக்கிவிடுவாள்; (எ-று.)

கமலம் என்ற வடசொல்-முதலிரண்டடிகளில் தாமரையென்ற பொருளிலும், மூன்றுமடியில் நீர்என்ற பொருளிலும் வந்தது. கம் - அறிவு; இந்திரியமுமாம். இதற்குத் தலேயென்று ஒருபொருளுள்ளதனுல், கமலம் என்பதற்கு-தலேவிதியென்று பொருள்கொள்ளுதலும் ஒன்று; அன்றி,கமல மென்பதை அகமலம், அல்லது பாதகமலம் என்பதன் முதற்குறைவிகாரமெனக் கொண்டாலும் பொருள்படும்; மனக்குற்றம் அல்லது பாவதோஷம் எனக் காண்க. விருப்பு-அன்பு, பக்தி; விரும்பு என்ற முதனிலே திரிந்த தொழிற்பெயர். கடவுளர் - (இவ்வுலகச பந்தத்தைக்) கடத்தலேயுடைய

வர். கடவுள் என்பதில், உள் - தொழிற்பெயர்விகுதி. 'ஒருகால்' என்பதனை 'கண்டு' என்பதோடு சேர்த்து ஒருமுறை அருணோக்கஞ்செய்தமாத்திரத்தில் தீர்த்திடுவாள் என்றுங் கொள்ளலாம். (கக)

உ0. காரணன்பாகமுஞ்சென்னியுஞ்சேர்தருகன்னியரு
நாரணனாகமகலாத்திருவு மொர்நான்மருப்பு
வாரணன்றேவியு மற்றுள்ளதெய்வமடந்தையரு
மாரணப்பாவைபணித்தகுற்றேவலடியவரே.

(இ - ள்.) காரணன் - காரணமென்னும் ஆகமத்தில் எடுத்துச்சொல்லப்பட்டவனான சிவபிரானது, பாகமும் - இடப்பக்கத்திலும், சென்னியும்-முடியின்மேலும், சேர்தரு-(முறையே) சேர்ந்துள்ள, கன்னியரும்-இளமகளிரான பார்வதி கங்கை யென்பவர்களும்,—நாரணன் ஆகம் அகலா திருவும்-திருமாலினது மார்பை விட்டுநீங்காத [மார்பில்நித்தியவாசஞ்செய்கிற] இலக்குமியும்,—ஓர் நால் மருப்பு வாரணன் தேவியும் - ஒப்பற்ற நான்குதந்தமுள்ள ஐராவதமென்னும் யானையையுடையவனான இந்திரனது மனைவியாகிய இந்திராணியும், மற்று உள்ள தெய்வம் மடந்தையரும்-மற்றைய தேவமாதர்களும், (ஆகிய அனைவரும்), ஆரணம் பாவை பணித்த குறு ஏவல் அடியவரே-வேதங்களின் சொரூபமான சரசுவதிதேவி கட்டளையிட்ட சிறியஏவல் தொழில்களைச் செய்யும் அடியார்களே யாவர்; (எ - று.)

என்றது, அறிவுக்குஉரிய தெய்வமான சரசுவதியினது தலைமையை மிகுதியாகப் புகழ்ந்து துதித்தவாறும். காரணம் - சைவாகமநூல் இருபத்தெட்டில் ஒன்று; இங்கே காரணன் என்றது, உபலக்ஷணவகையால் எல்லாஆகமங்களினாலும் பிரதிபாதிக்கப்படுகிறவ னென்றவாறும். இனி, யாவர்க்கும் முதல்வராகிய திரிமூர்த்திகளில் ஒருவனென்றகருத்தால் காரணன் எனக் கூறியதாகக் கொள்ளுதலும் ஒன்று. மலையரசனாகிய இமவானினது பெண்களாகிய உமை கங்கை என்ற இருவரும் சிவபிரானைச்சேர்ந்தனராதலால், 'காரணன் பாகமுஞ் சென்னியுஞ் சேர்தரு கன்னியர்' எனப்பட்டனர். கங்கையைச் சிவபிரானுக்கு மனைவியென்றற்குக் காரணம்-சிவபிரானை நீங்காது சேர்ந்திருத்தலும்,குமாரனையுண்டாக்குதற்குச் சிவபிரான்வெளிப்படுத்திய அனற்பொறிகளை யேற்றுக்கொண்டமையுமாம்.

உமை சிவன்பாகஞ்சேர்ந்த கதை:—பிருங்கி யென்னும் மகாமுனிவர் தன்னைவிலக்கிச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக்கண்ட பார்வதிதேவி, தன்பதியை நோக்கி 'முனிவர்என்னைப்பிரதக்ஷிணம்செய்யாமைக்கு ஏது என்?' என்று வினவ, சிவபிரான் 'இம்மைமறுமைப்பயன்களைப் பெற விரும்புபவர் உன்னையும், முத்திபெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி பெருமானைப் பிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம் பெற்றன ளென்பதாம்.

கங்கை சிவபிரான் சென்னி சேர்ந்த கதை:—சூரியகுலத்துத் தோன்றிய பகீரதசக்கரவர்த்தி,கபிலமுனிவரதுகண்ணின் கோபத்தீக்கு இலக்காய் உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரானசகரபுத்திரர்

அறுபதினாயிரவரையும்நற்கதிபெறுவிக்கும்பொருட்டுநெடுநாள்தவஞ்செய்து கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில் அதனது விசையோடுவரும் வெள்ளப்பெருக்கை ஏற்றுக்கொள்ளுதற்கு ஏற்ற வலிமை பூமிக்குஇல்லையென்ற காரணத்தால் அவ்வரசன் சிவபிரானைப்பிரார்த்திக்க,அவன்வேண்டுகோளின்படி அப்பெருமான் அந்நதியைச் சடைமுடியிலேற்றுப் பின்பு சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளினனென்பதாம்.

காரணம், பாகம், வாரணம் - வடசொற்கள். கந்யா, நாராயணன்என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சேர்தரு, தாஎன்ற துணைவினை விகாரப்பட்டது. குறுமை+ஏவல்=குற்றேவல்;பண்புஈறுபோய்த்தன்ஒற்றுஇரட்டிற்று. ஓர்-ஒன்று என்பதன்விகாரம்; உகரம்பெறுமலும்,முதல்நீளாமலும்நின்றது.

உக. அடிவேதநாறுஞ்சிறப்பார்ந்தவேதமனைத்தினுக்கு
முடிவே தவளமுளரிமின்னே முடியாவிரத்ன
வடிவே மகிழ்ந்துபணிவார்தமதுமயலிரவின்
விடிவே யறிந்தென்னையாள்வார்தலந்தனில்வேறிலையே.

(இ-ள்.) அடி வேதம் நாறும் சிறப்பு ஆர்ந்த - திருவடிகள் வேதங்களில்வாசனைவீசப்பெறுகிற மேன்மைநிறைந்த, வேதம் அனைத்தினுக்கும் முடிவே - வேதங்களெல்லாவற்றுக்குந் தேர்ந்தகருத்தாகவுள்ளவளே! தவளம் முளரி மின்னே - வெண்டாமரைமலரில் வீற்றிருக்கிற மின்னற்கொடிபோல விளங்குபவளே! முடியா இரத்ன வடிவே - அழியாத இரத்தினம் போலப் பிரகாசிக்கிற வடிவமுடையவளே! மகிழ்ந்து பணிவார்தமது மயல் இரவின் விடிவே-அன்புகொண்டு வணங்கும் அடியார்களுடைய அஞ்ஞான மயக்கமாகிய இருளிரவை யொழிக்குஞ் சூரியோதயமாகவுள்ளவளே! என்னை அறிந்து ஆள்வார்-எனதுநிலைமையை அறிந்து என்னை அடிமைகொண்டு பாதுகாப்பவர், தலந்தனில் - இவ்வுலகத்தில், வேறு இலை - (உன்னையன்றி) வேறு யாரு மில்லை; (எ - று.)—ஏ - தேற்றம்.

தமக்குக் கலைமகளையன்றி வேறுகதியின்மையை வெளியிட்டார். 'அடிவேதம்நாறும் சிறப்பார்ந்த' என்றது,சரசுவதிக்குஅடைமொழி; அவளுடைய திருவடி வேதங்களிற்பரிமளித்தலாவது-வேதங்களில் எங்கும்இடைவிடாது துதிக்கப்படுதல். திருவடித்தாமரையென்னும் வழக்கை உட்கொண்டு, 'அடிநாறும்' என்றன ரென்க. இனி, திருவடிகள் வேதங்களின்வாசனைவீசப்பெற்ற என்று பொருளுரைத்தாலும் முன்போலவே கருத்துக்கொள்ளலாம்; (வில்லிபுத்தூரார்பாரதத்தில் "கங்கையு நான்மறையுந் துளவுங் கமழ் கழலிணை","கங்கையினோடுங் காளியன்முடியுங் காளிந்திக்கரையுமே கமழும், பங்கயமலர்கள்" என்றவை இங்கு ஒப்புநோக்கத்தக்கன.) வேதம்அனைத்தினுக்கும் முடிவு - வேதங்களின் உத்தரபாகமும் தேர்ந்தகருத்து மான வேதாந்தத்திற் சித்தாந்தஞ்செய்யப்பட்ட மெய்ப்பொருளாக வுள்ளவளென்றபடி; வேதாந்தசொரூபமாகவுள்ளவ ளென்றலும் ஒன்று. தவளம், ரத்நம் - வடசொற்கள். முளரி - முட்களையுடைய அரியையுடையதெனப் பொருள்படுங் காரணக்குறி.வேற்றுமைத்தொகையன்மொழி. அரி=அரை;

தண்டின் மேற்புறம். மின் - உவமையாகுபெயர். விடிவு - பொழுதுவிடியுங்காலம், சூரியோதயம். தன் அடியார்களின் அகவிருளை யொழிப்பவளென்பது, 'பணிவார்தமது மயலிரவின் விடிவே' என்பதன் கருத்து. (உக)

உஉ. வேறிலையென் றுனடியாரிற்கூடிவிளங்குநின்பேர்
கூறலையானுங்குறித்துநின்றே னைம்புலக்குறும்பா
மாறலைகள்வர்மயக்காமனின்மலர்த்தாணெறியிற்
சேறலையீந்தருள் வெண்டாமரைமலர்ச்சேயிழையே.

(இ - ள்.) வெள் தாமரை மலர் - வெண்டாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற, சேயிழையே - செவ்வியஆபரணங்களையுடையவளே!— வேறு இலை என்று - (உன்னையன்றி) வேறு (கதி) இல்லையென்று நிச்சயித்து, உன் அடியாரில் யானும் கூடி - உனது அடியார்களில் நானும் ஒருவனாகச் சேர்ந்து, விளங்கும் நின் பேர் கூறலை குறித்து நின்றேன் - சிறப்புப்பெற்று விளங்குகிற உனதுதிருநாமங்களைச் சொல்லுதலைக் குறிக்கொண்டுநின்றேன் ; ஐம்புலம் குறும்பு ஆம் - பஞ்சஇந்திரியங்களின் பொல்லாங்குகளாகிய, மாறு அலை கள்வர் - எதிர்த்து (வழி) பறிக்கிற திருடர்கள், மயக்காமல்-(என்னை) மயங்கச்செய்யவொட்டாதபடி, நின் மலர் தாள் நெறியில் சேறலை - உன்னுடைய திருவடித்தாமரைகளின் வழியே செல்லுந்திறத்தை, ஈந்து அருள் - (எனக்குக்) கொடுத்தருள்வாய் ; (எ - று.)

("நல்லவை செய்யத் தொடங்கினும் நோனுமே, அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும் - எல்லி, வியனெறிச் செல்வாரை யாறலைத்துண்பார், செலவுபிழைத் துய்ப்பபோல்"என்றபடி) நேர்வழியிற் செல்பவரை வழிக்கொள்ளைக்காரர் அதைவிட்டுக் கொடுவழியிற்செல்லும்படி சூழ்ச்சிசெய்வது போல, எனதுபஞ்சஇந்திரியங்கள் என்னைமயக்கித் தீநெறிச்செலுத்தாதபடி நீ என்பக்கல் அருள்செய்து என்னை உன்திருவடியை விடாது பின்பற்றிச் செல்லுதலாகிய நன்னெறியிற் செலுத்தவேண்டுமென வேண்டியபடி.

பேர் - மரூஉ. 'குறும்பாமாறலைகள்வர்'என்னுந்தொடரைக் குறும்பாம் ஆறு அலை கள்வர் எனப்பிரித்து, ஆறு அலை கள்வர் - வழிபறிக்குந் திருடர் என்று பொருள்கொள்ளுதல் பொருந்து மாயினும் மோனைத்தொடைக்குச் சேராமை அறிக. அலைகள்வர்-பிறவினையில்வந்த வினைத்தொகை. சேறல் - செல்லுதல் ; தொழிற்பெயர் ; செல் - பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது - விகாரம், தகரம் றகரமான விடத்து லகரம் கெட்டது - சந்தி. சேயிழை - பண்புத்தொகையன்மொழி ; செம்மை + இழை = சேயிழை ; இங்கே, செம்மை - அழகு ; நிறமெனக் கொள்ளலாகாது ; "வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு, வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை ......தாய்" ஆதலால். கள்வர், கள் - பகுதி, வ் - பெயரிடைநிலை. (உஉ)

உ௩. சேதிக்கலாந்தர்க்கமார்க்கங்க ளெவ்வெவர்சிந்தனையுஞ்
சோதிக்கலா முறப்போதிக்கலாஞ் சொன்னதேதுணிந்து
சாதிக்கலா மிகப்பேதிக்கலா முத்திதானெய்தலா
மாதிக்கலாமயில்வல்லிபொற்றாளையடைந்தவர்க்கே.

(இ - ள்.) ஆதி - பழமையான, கலா மயில் - கல்விக்கு உரிய மயில் போலுஞ் சாயலுள்ள மகளும்,வல்லி-பூங்கொடிபோன்றவளுமான சரசுவதியினது, பொன் தாளே - அழகிய திருவடிகளே, அடைந்தவர்க்கு - சரணமடைந்தவர்களுக்கு,—தர்க்க மார்க்கங்கள் சேதிக்கல் ஆம்-(தம்மையெதிர்த்து வாதப்போர் செய்பவர்களுடைய)வாதநெறிகளைக் கண்டித்தல்இயலும்; எவ்வெவர் சிந்தனையும் சோதிக்கல் ஆம் - யார்யாருடைய மனத்தின் நிலைமையையும் ஆராய்ந்தறிதல் இயலும்; உற போதிக்கல் ஆம் - (எல்லோர்க்கும் எல்லாவிஷயங்களையும்) நன்றாகச்சொல்லியுணர்த்துதல் இயலும்;சொன்னதே துணிந்து சாதிக்கல் ஆம் - தாம் சொன்ன பொருளையே சித்தாந்தமாக நிச்சயித்து நிலைநாட்டவல்ல திறமை உண்டாம்; மிக பேதிக்கல் ஆம்-(தமது கொள்கைக்கு மாறாகப் பிறர்சொன்ன பூர்வபக்ஷங்களையெல்லாம்) மிகுதியாகக் கண்டிக்குந் திறம் உண்டாம்; முத்தி தான் எய்தல் ஆம் - மோக்ஷத்தை எளிதில் அடைதல் கைகூடும்; (எ - று.)

சரசுவதியைச் சரணமடைந்தார்க்கு அவளருளால் இம்மையிலுண்டாகும் வாதசக்தி போதநாசக்தி முதலிய சக்திவிசேஷங்களும், மறுமையில் முத்தியும் கைகூடுகிற சிறப்பை இதில் வெளியிட்டார்.

சேதிக்கல், சோதிக்கல், சாதிக்கல், பேதிக்கல் என்றவற்றின் பகுதி - வடமொழியடியாப்பிறந்த வினை ; கு-சாரியை, அல்-விகுதி. தர்க்கமார்க்கம், சிந்தநா, முக்தி, ஆதி, வல்லீ-வடசொற்கள். கலா - வடசொல், ஆவீறு ஐயாகாது நின்றது. எவ்வெவர் என்றதில், அடுக்கிநின்ற வினு-எஞ்சாமைகுறிப்பது. சொன்னது - இறந்தகால வினையாலணையும்பெயர் ; இதில், 'இன்' இடைநிலை முதல் தொக்கது. எய்தல் என்ற தொழிற்பெயரில், எய்து - பகுதி, அல்-விகுதி : (அம்புசெலுத்துத லென்னும் பொருளில், எய்-பகுதி, தல் - விகுதி.) (உரு)

உச. அடையாளநாண்மலரங்கையிலேடுமணிவடமு
முடையாளைநுண்ணிடையொன்றுமிலாளையுபநிடதப்
படையாளையெவ்வுயிரும்படைப்பாளைப்பதுமநறுந்
தொடையாளையல்லது மற்றினியாரைத்தொழுவதுவே.

(இ - ள்.) நாள் மலர் - அன்றுமலர்ந்த தாமரைப்பூப்போன்ற, அம் கையில் - அழகிய கைகளில், ஏடும் - ஏட்டுப் புத்தகத்தையும், அணி வடமும் - அழகிய ஜபமாலையையும், அடையாளம் -தனக்குஉரிய அறிகுறியாக, உடையாளை - கொண்டுள்ளவளும், நுண் இடை ஒன்றும் இலாளை - நுட்பமான இடை சிறிதும்இல்லாதவளும், உபநிடதப் படையாளை - உபநிஷத்துக்களைத் தன் பரிவாரமாக வுடையவளும், எ உயிரும் படைப்பாளை - எல்லாப்பிராணிகளையும்சிருஷ்டிப்பவளும், நறு பதுமம் தொடையாளை-வாசனை வீசுகிற செந்தாமரைமலர்மாலையை யுடையவளுமான சரசுவதியை, அல்லது - அல்லாமல், இனி மற்று யாரை தொழுவது-இனிமேல் (யான்) வேறு யாரை வணங்குவது ? (எ - று.)

வேறுயாரையும் வணங்கே னென்றும், பிறரெவரும் வணங்குதற்கு உரியரல்லரென்றும் கூறியபடியாம். இனி, 'இனி' என்றது - அவளைச்சரணம

டைத்தபின்பு என்றபடி. சரசுவதி இடக்கையிற் புத்தகத்தையும், வலக்கையிற் படிகமாலையையும் உடையளென அறிக. இவை சரசுவதிக்கு அடையாளமாகக் கூறப்படுதலை, பெருந்தேவனார்பாரதத்தில் "புத்தகமு ஞானத்துமுத்திரையும் பொற்பளிக்கும், வைத்த கமண்டலமும் வன்னிகையும் - முத்து, வடங்கொண்ட மார்பினள்" என்றதனாலும், கம்பராமாயணத்தில் "புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர் ஞான, வித்தகர் தரித்த செங்கை விமலை" என்றதனாலும் காண்க. இனி, நாள் மலர் என்பதற்கு-புதியதாமரை மலர்களையும் என்று பொருள் கொண்டு, நான்குகைகளுள் மற்றையஇரண்டில் தாமரைமலர்களைத் தரித்துள்ளா ளென்றலு மொன்று.

இனி, அடையாள மென்றது, ஞானமுத்திரையாகவுமாம்; அதாவது - பிறர்க்கு நல்லுணர்வை உபதேசிக்கும் அறிகுறி; அது - கட்டைவிரல்நுனியையும் சுட்டுவிரல்நுனியையும் ஒன்றுசேர்த்து மற்றை மூன்று விரல்களையும் நேர்நிற்க வைக்கும் நிலை. படிகமாலை, ஜபமந்திரத்தைத் தொகையிடுதற்கு உரியது. மணிவட மெனப் பதம்பிரித்து உரைத்தல், மோனைத்தொடைக்கு இயையாது. இடை மிகச்சிறுத்துள்ள தென்னும் பொருளில் அதிசயோக்தி வகையால் அதை இல்லையென்றே சொல்லுங் கவிமரபு பற்றி, 'நுண்ணிடையொன்றுமிலாள்' என்றார். உபநிஷதம், பத்மம் - வடசொற்கள். உபநிடதப் படையாள் என்றது - உபநிடதங்களுக்குத் தலைவி யென்றும், அவற்றால் வழிபட்டுத் துதிக்கப்படுபவ ளென்றுங் கூறியபடியாம். மூன்றாமடியில் 'படையாள்,' 'படைப்பாள்' என்ற சொற்கள் இங்கு வெவ்வேறுபொருளில் வந்தாலும் ஒன்றுக்கொன்று எதிர்மறையான பொருளுந் தரக்கூடியதனால் அவற்றைஒருங்குதொடரவைத்தது,தொடைமுரண்;"மொழியினும்பொருளினும்முரணுதல்முரணே"என்றார் தொல்காப்பியனார். இது-சொல்தொடைமுரண். இரண்டாம் அடியில், 'உடையாள்' 'இலாள்' என்பன வந்தது, பொருள்தொடைமுரண். தொடை - தொடுக்கப்படுவது. மற்று - இடைச்சொல். தொழுவது என்ற தொழிற்பெயர்-இங்கே வினைமுற்றாய் நின்றது.

உரு. தொழுவார்வலம்வருவார்துதிப்பார்தந்தொழின்மறந்து
விழுவாரருமறைமெய்தெரிவாரின்பமெய்புளகித்
தழுவாரினுங்கண்ணினீர்மல்குவாரென்கணுவதென்னை
வழுவாதசெஞ்சொற்கலைமங்கைபாலன்புவைத்தவரே.

(இ - ள்.) வழுவாத - தவறுபடாத, செம் சொல் - செவ்விய சொற்களையுடைய, கலை மங்கைபால் -கல்விக்கு உரிய மகளான சரசுவதியினிடத்தில்,அன்பு வைத்தவர்-பக்தியுள்ளவர்கள்,—(அப்பிராட்டியை), தொழுவார்-நமஸ்கரிப்பார்கள்; வலம் வருவார்-பிரதக்ஷிணஞ்செய்வார்கள்; துதிப்பார் - தோத்திரம்பண்ணுவார்கள்; தம் தொழில் மறந்து - தமதுசெயலை மறந்து [பரவசப்பட்டு], விழுவார் - கீழ்விழுவார்கள்; அரு மறை மெய் தெரிவார் - (அறிதற்கு) அரிய வேதங்களின் உண்மைப்பொருளை உணர்வார்கள்; இன்பம் - ஆனந்தத்தால், மெய் புளகித்து - உடல் மயிர்சிலிர்க்கப்பெற்று, அழுவார் - புலம்புவார்கள்; இனும் - இன்னும், கண்ணின் நீர் மல்குவார்-ஆனந்

D

தக்கண்ணீர்பெருகப்பெறுவார்கள்; என்கண் ஆவது என்னை-(இப்படிப்பட்ட செயல்களுள்) என்னிடத்து உண்டாவது யாது? [ஏதுவுமில்லை என்றபடி.]

பக்திகாரியமான மெய்ப்பாடொன்றும் என்னிடத்தில் இல்லையென்று கவி தமது விநயத்தை வெளியிட்டபடியாம். இனும் - தொகுத்தல். என் கண், கண் - ஏழனுருபு. (உ௫)

உ௬. வைக்கும்பொருளுமில்வாழ்க்கைப்பொருளுமற்றெப்பொருளு
பொய்க்கும்பொருளன்றிநீடும்பொருளல்லபூதலத்தின் [ம்
மெய்க்கும்பொருளுமழியாப்பொருளும்விழுப்பொருளு
முய்க்கும்பொருளுங்கலைமானுணர்த்துமுரைப்பொருளே.

(இ - ள்.) வைக்கும் பொருளும் - (பாடுபட்டுத் தேடி) வைக்கும் (பொன்னும் மணியும் நெல்லுமாகிய) செல்வங்களும், இல்வாழ்க்கை பொருளும் - சம்சாரவாழ்விலுள்ள (மக்களும் சுற்றமுமாகிய) ஐசுவரியங்களும், மற்று எ பொருளும் - (ராஜாங்கம் வாகனம் அடிமை என்னும்) மற்றை ஐசுவரியங்களும் (ஆகிய அஷ்டைசுவரியங்களும்),பொய்க்கும் பொருள் அன்றி-நிலையின்றி அழியும் பொருள்களாகுமேயல்லாமல், நீடும் பொருள் அல்ல-(அழிவின்றி)நீடூழிகாலம்நிலைத்துநிற்கும் பொருள்களல்ல; பூதலத்தில் மெய்க்கும் பொருளும் - நிலவுலகத்தில் [இம்மையில்] அழியாதுநிலைத்துநிற்கும் பொருளும், அழியாபொருளும் - (மறுமையில்) அழிவில்லாத ஐசுவரியமும், விழு பொருளும்-(இவற்றினும்) சிறந்ததான முத்திச்செல்வமும், உய்க்கும் பொருளும் -(முத்தியிற்) சேர்ப்பதான தத்துவப்பொருளும், கலை மான் உணர்த்தும் உரை பொருளே-கல்விக்கு உரிய மகளான சரசுவதி சொல்லுஞ் சொற்களின் பொருளேயாம் ; (எ - று.)

செல்வப்பொருள்போ லன்றிக் கல்விப்பொருள் சாசுவதமாயிருக்குந் தன்மையும், சரசுவதியின் உருவமான சொல் நித்தியமென்றலும், இங்கு விளக்கப்பட்டன. இல் - வீடு : அதில் வாழ்தல் - இல்வாழ்க்கை. வாழ்க்கை-கைவிகுதி பெற்ற தொழிற்பெயர். விழு-சிறப்பையுணர்த்தும் விழுமம் என்னும் உரிச்சொல்லின் விகாரம். மான் - உவமையாகுபெயர். (உ௬)

உ௭. பொருளாவிரண்டும்பெறலாகுமென்றபொருள்பொருளோ
மருளாதசொற்கலைவான்பொருளோபொருள்வந்துவந்தித்
தருளாய்விளங்குமவர்க்கொளியாயறியாதவருக்
கிருளாய்விளங்குநலங்கிளர்மேனியிலங்கிழையே.

(இ - ள்.) வந்து - (அருகில்) வந்து, வந்தித்து-(தன்னை) நமஸ்கரித்து, அருள் ஆய் - (தனது) திருவருளுக்கு இலக்காகி, விளங்குமவர்க்கு - சிறப்புற்றவர்களுக்கு, ஒளி ஆய் - பிரகாசமாகி [புலனாய்த்தோன்றி], அறியாதவருக்கு இருள் ஆய்-(தனது மகிமையை) உணராதவர்களுக்குப் புலனாகாதுநின்று, விளங்கும் - சுயம்பிரகாசமாய் விளங்குகின்ற, நலம் கிளர் மேனி - அழகு மிக்க திருமேனியையும், இலங்கு இழையே - விளங்குகிற ஆபரணங்களையு

முடையவளான சரசுவதியே! பொருளால் இரண்டும் பெறல் ஆகும் என்ற பொருள் பொருளோ - ('அறம் பொருள் இன்பம் என்ற திரிவர்க்கத்தில் இடையிலுள்ளதான) பொருளினால் (அறமும் இன்பமுமாகிய மற்றை) இரண்டுபொருள்களையும் அடையலாம்' என்று சிறப்பித்துக் கூறப்பட்ட செல்வப்பொருள் சிறந்தபொருளாமோ? [ஆகா]; மருளாத சொல் கலை பொருளோ வான் பொருள்-அறியாமையது மயக்கத்தை யொழிக்கிற சொற்களையுடைய கல்விப்பொருளோ வெனின் சிறந்தபொருளாம்; (எ - று.)

கலைமகளாகிய உனக்கு உரியதான கல்விப்பொருளே சிறந்தபொருளாமென்றும், மற்றை அழியுந்தன்மையதான செல்வப்பொருள் அப்படிப்பட்ட சிறந்தபொருள் அன்றென்றும் கவி தாம் சரசுவதியின் விபவத்தை அறிந்து பாராட்டுந்தன்மையை அப்பிராட்டியின் சன்னிதியிலே விண்ணப்பஞ்செய்ததாகும், இது. பொருளா லிரண்டும் பெறலாகுமென்ற பொருள்-"அறனீனு மின்பமுமீனுந் திறனறிந்து, தீதின்றிவந்தபொருள்", "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள், ளேனையிரண்டு மொருங்கு", "வடுவிலாவையத்து மன்னிய மூன்றில், நடுவணதெய்த இருதலையுமெய்தும், நடுவணது எய்தாதா னெய்தும் உலைப்பெய்து, அடுவதுபோலுந் துயர்," "பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே யம்மூன்றும், ஆராயிற்றானே யறம்பொருளின்பமென்று, ஆராரிவற்றி னிடையதனை யெய்துவார், சீராரிருகலையு மெய்துவர்," "இல்லார் இருமையும் நல்லஎய்தார்", "வறியார் இருமை யறியார்" என்பன காண்க. வான் - உரிச்சொல். முதலடியில், ஓகாரம் - எதிர்மறை; இரண்டாமடியில், ஓகாரம் - தெரிநிலை. (உஎ)

உஅ. இலங்குந்திருமுகமெய்யிற்புளகமெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்றவாக்கும்வலிக்குமனமிகவே
துலங்குமுறுவல்செயக்களிகூருஞ்சுழல்புனல்போற்
கலங்கும்பொழுதுதெளியுஞ்சொன்மானைக்கருதினர்க்கே.

(இ - ள்.) சொல் மானை கருதினர்க்கு - சொற்களுக்கு உரிய மகளான சரசுவதியைத் தியானித்தவர்களுக்கு,—திரு முகம் - அழகிய முகம், இலங்கும் - (மலர்ந்து) விளங்கும்; மெய்யில் - உடம்பில், புளகம் எழும் - மயிர்ச்சிலிர்ப்பு உண்டாம்; கண்கள் நீர் மலங்கும் - கண்களில் ஆனந்தபாஷ்பம் ததும்பும்; பழுது அற்ற வாக்கும் வலிக்கும்-குற்றமில்லாத வாய்ச்சொல்லும் உறுதிபெறும்; மனம் மிகவே துலங்கும் - மனம் மிகுதியாகத் தெளிவுபெறும்; முறுவல் செய களி கூரும் - புன்சிரிப்புஉண்டாம்படி சந்தோஷம் மிகும்; சுழல் புனல் போல் கலங்கும் பொழுது தெளியும் - நீர்ச்சுழிபடுகிற நீர்போலக் கலக்கமுண்டாம்பொழுது அக்கலக்க மொழியும்; (எ - று.)

"உறுங் கவலொன் றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வி" ஆதலால், 'சுழல்புனல்போற் கலங்கும்பொழுது தெளியும்' எனப்பட்டது. வாக்குவலிக்கும் என்பதற்கு - சிறந்தசொற்கள் வெளிவருமென்றும், செல்வாக்குஉண்டாகு மென்றுங் கருத்துக் காண்க. வாக் - வடசொல். செய-தொகுத்தல்.

௯௯. கரியாரளகமுங்கண்ணுங்கதிர்முலைக்கண்ணுஞ்செய்ய
சரியார்கரமும்பதமுமிதழுந்தவளநறும்
புரியார்ந்ததாமரையுந்திருமேனியும்பூண்பனவும்
பிரியாதென்னெஞ்சினுநாவினுநிற்கும்பெருந்திருவே.

(இ - ள்.) பெருந் திருவே - (உன்னைச்சரணமடைந்தவர்க்குப்) பெருஞ்செல்வமுண்டாதற்குக்காரணமான கலைமகளே!—(உனது), கரி ஆர் அளகமும்-கருநிறம்பொருந்திய முன்னெற்றிமயிரும் [கூந்தலும்],—கண்ணும்-கண்களும்,—கதிர் முலைக்கண்ணும் - ஒளிபொருந்திய முலைக்கண்களும்,—செய்ய - சிவந்த, சரி ஆர் - வளையல்கள் நிறையஅணியப்பெற்ற, கரமும் - கைகளும்,—பதமும்-திருவடிகளும்,—இதழும் - அதரமும்,—தவளம் நறும் புரி ஆர்ந்த தாமரையும்-நல்லமணமுடையதும் முறுக்குடையதுமான வெண்டாமரைமலரும்,—திருமேனியும் - உடம்பின்நிறமும்,—பூண்பனவும்-அணிந்துகொள்ளும் ஆபரணங்கள் முதலியனவும், (ஆகிய உனது சம்பந்தம்பெற்ற எல்லாப் பொருள்களும்), பிரியாது - விட்டுப்பிரியாமல், என் நெஞ்சினும் - எனது மனத்திலும், நாவினும் - நாக்கிலும், நிற்கும் - நிலைபெற்றிருக்கும்; (எ - று.)

என்றது, எப்பொழுதும் நான் உனது சம்பந்தம்பெற்ற பொருள்களையே நினைத்தலும் புகழ்தலும் செய்வே னென்றவாறு. அளகம் - அலகம், வடசொல். (உக)

௱. பெருந்திருவுஞ்சயமங்கையுமாகியென்பேதைநெஞ்சி
லிருந்தருளுஞ்செஞ்சொல்வஞ்சியைப்போற்றி லெல்லாவுயிர்க்
பொருந்தியஞானந்தருமின்பவேதப்பொருளுந்தருந் [கும்
திருந்தியசெல்வந்தருமழியாப்பெருஞ்சீர்தருமே.

(இ - ள்.) பெரு திருவும் சயமங்கையும் ஆகி - ஸ்ரீமகாலக்ஷ்மியின் சொரூபமும் ஜயலக்ஷ்மியின்சொரூபமுமா யுள்ளவளும், என்பேதைநெஞ்சில் இருந்து அருளும் - எனது அறிவின்மையையுடைய மனத்தில்வீற்றிருக்கின்றவளும் (ஆகிய), செம் சொல் வஞ்சியை-செவ்வியசொற்களுக்கு உரிய மகளான சரசுவதியை, போற்றில் - துதித்தால்,—(அவள்), எல்லா உயிர்க்கும் - (துதிக்கின்ற) அச்சனங்களெல்லோர்க்கும், பொருந்திய ஞானம் தரும்-நிலையான நல்லுணர்வை அளித்தருள்வாள்; இன்பம் வேதம் பொருளும் தரும்-பேரின்பத்தைக்கூறுகிற வேதத்தின்பொருளையும் விளக்கியருள்வாள்; திருந்திய செல்வம் தரும் - சுத்தமான செல்வத்தைக் கொடுத்தருள்வாள்; அழியா பெரு சீர் தருமே - அழிவற்றதான பெரியமுத்திச்செல்வத்தையுந் தந்தருள்வாள்; (எ - று.)

அழியாப்பெருஞ்சீர் - என்றும் அழிதலில்லாத பெருங்கீர்த்தியெனினுமாம். வஞ்சி - நீர்வஞ்சிக்கொடி; அதுபோல மெல்லியளாய் ஒல்கியொசியும் மகளுக்கு உவமையாகுபெயர். (௱)

சரசுவதியந்தாதி முற்றிற்று.

---

## ஆக்கியோன் பெயர்.

செந்தா தியன்மணிப் பூண்புலி யூரற்குச் சேர்ந்தளித்துச்
சிந்தாத் தியாகஞ்செய் வில்லவ ராயன் றிருப்புதல்வன்
நந்தா வளந்திகழ் நல்லைச்சின் னத்தம்பி நாவலன்சீர்
அந்தாதி மாலையை வேதாட வீசற் கணிந்தனனே.

இ-ள். செந்தாது - பொன். மணிப்பூண் - இரத்தினாபரணம். சிந்தா-மணம். வேதாடவி - வேதாரணியம.

கணபதிதுணை.

# மறைசையந்தாதி.

## காப்பு.

அந்தமு மாதியு மில்லா மறைசையி லத்தர்நம்மேற்
செந்தமிழ் நூற்பொரு ளந்தாதி பாடச் சிலம்பிலன்னை
இந்தன வாணுதற் சுந்தரி யம்பிகை யின்றெடுத்த
சுந்தர வீரகத் திச்சே தகன்றாட் டுணைதுணையே.

(இதனரும்பதப்பொருள்.) அந்தம் - முடிவு. மறைசை - வேதாரணியம். அத்தர் - கடவுள். செந்தமிழ் நூற்பொருள் - செம்மையாகிய தமிழ்நூல்களி லுள்ள பொருளால். இந்து - சந்திரன். வாள் - ஒளி. நுதல் - நெற்றி. வீர கத்திச் சேதகன் - வீரக்கொலையாலாகிய பாவத்தினையழிப்பவன். கத்தி - கொலை. தாள் - பாதம். துணை - இரண்டு.

திருவா ரணங்கு மணமகன் பூசித்த செல்வர் வெள்ளைங்
கருவா ரணங்கு மிறும்பண்ணை சூழ்மறைக் காடரிசை
மருவா ரணங்கு திரையாரைப் பாடுமென் வாய்க்கவிதைக்
கிருவா ரணங்குசெய் பூண்முலைப் பாமயி லென்றுணையே.

(இ-ள்.) திரு ஆரணங்கு - இலக்குமியாகிய அரிய தெய்வப்பெண். கரு வாரணம் - கருவினையுடைய சங்கு. பண்ணை - வயல். ஆரணம் - வேதம். கவி தை - செய்யுள். வார் அணங்குசெய் பூண் இரு முலை பாமயில் - கச்சினையும் அழகுசெய்யும் ஆபரணத்தையும் அணிந்த இரண்டாகிய தனங்களையுடைய சரசுவதி. (௧)

என்றா டலையொன்று காலனைத் தாக்கி யெழிற்கனக
மன்றா டலைச்செய்து வான்பரவைப்பெயர் மன்னும்மின்னுஞ்
சென்றா டலைக்கடை வாயிற்படி யினுஞ் சேர்ந்துவைகும்
உன்றா டலைவைப் பதுமறைக் காட்டி லுறைபரனே.

(இ-ள்.) ஆடலை ஒன்று - அடுதலைப்பொருந்திய. காலன் - இயமன். கனகமன்று - கனகசபை. சென்றாள் - செல்லுநின்றவள். உன் தாள் - உனது பாதம். தலைவைப்பது என்று - தலையிலே வைப்பது எப்போது? (௨)

பரமரம் பாலிகைச் செம்ப வளக்கொடி பங்கர்சுரும்
பரமரம் பாணை யெரித்தார் மறைசைப் பதியர்வரிப்
பிரமரம் பாடிய பொற்கொன்றைத் தாமரைப் பேசுதியோர்
தரமரம் பாவிநெஞ் சேவினை யாங்கருந் தாதினுக்கே.

(இ-ள்.) பரமர் - மேலானவர். அம் - அழகு. பாலிகை - அதரம். சுரும்பர் அமர் அம்பானை - வண்டுகளிருக்கின்ற புஷ்பபாணங்களையுடைய மன்மதனை. பிரமரம் - வண்டு. கொன்றை தாமர் - கொன்றைமாலையையுடையவர். தாமம் - மாலை. பேசுதி - துதிக்குதி. ஓர்தரம் - ஒருமுறை. கருந்தாதினுக்கு அரம் - (அத்துதி) இரும்பினைக் கெடுத்தற்கு அரம்போலாகும். (௩)

கருந்தாதை யன்ன கயவர்தம் மீதிற் கவிதைசொல்லி
வருந்தாதை யானனன் வேதா ரணியன்வை வேற்குகனைத்
தருந்தாதை தெய்வ மணங்கமழ் சேவடித் தாமரைமேற்
பொருந்தாதையோமினைவில்லாவென்சித்தப்பொறிச்சுரும்பே.

(இ-ள்.) கருந்தாதை அன்ன - இரும்பினையொத்த. கயவர் - கீழோர். ஐயானனன் - ஐந்துமுகமுடையவர். குகனை தரும் தாதை - முருகக்கடவுளைப் பெற்ற பிதா. ஐயோ பொருந்தாது - அந்தோ பொருந்துகின்றிலது. (௪)

சுரும்பர வைக்கிசை தாமரை போபெருந் தொல்புவியோ
கரும்பர வைக்கண் ணியலேது மூதிருட் காலமுல்லை
அரும்பர வைப்பயி லும்வா ணகையல்கு லன்னமென்ன
வரும்பர வைக்கு நடந்தார் மறைசை வரையிறையே.

(இ-ள்.) சுரும்பர் அவைக்கு - வண்டுக்கூட்டத்திற்கு. புவி-பூமி. கரும்பரவை கண் - கரிய கடல்போலுங் கண்ணுடையவள். முல்லை அரும்பு பயிலும் வாள் நகை - முல்லையரும்பினை ஒத்த ஒளிபொருந்திய பல்லு. அரவை பயிலும் அல்குல் - பாம்பின் படத்தினையொத்த அல்குல். (௫)

வரைச்சங் கரிக்கு மணவாளர் கூடல் வளர்ந்திடுமூ
வுரைச்சங் கரிக்கு வனஞ்சூழ் மறைசையி லுத்தமரா
நரைச்சங் கரிக்கு விடப்பாணிச் சக்கரத் தானைதொட்ட
திரைச்சங் கரிக்குந் தெரியாப் பதமிழல மசர்மின்களே.

(இ-ள்.) வரை சங்கரிக்கு - மலையிற்றோன்றிய உமாதேவிக்கு. கூடல்-மதுரை. மூவுரைச்சங்கர் - முத்தமிழ்ச்சங்கமுடையவர். இக்குவனம் - கருப்பஞ்சோலை. அச்சம் கரிக்கு விட - பயம் யானையினின்றும் நீங்க. திரை-கடல். சங்கு அரிக்கும் - சங்கினையுடைய விட்டுணுவுக்கும். (௬)

மின்னஞ்சு கங்கைச் சடாதரன் சத்த விடங்கன்றிரை
வன்னஞ் சுகந்தவன் மாமறைக் காடற்கு மாதொரிராப்
பன்னஞ் சுகமெண வேள்காம காண்டப் பகழியினால்
இன்னஞ் சுகமில்லை யென்றத்தையோது மிளந்தத்தையே.

(இ-ள்.) சத்த விடங்கன் - ஏழாகிய விடங்கமுடையவர். விடங்கம்-உளிகொண்டு செய்யப்படாத சுயம்புலிங்கம். வல் நஞ்சு உகந்தவன் - வலிய நஞ்சினை விரும்பியுண்டவர். பன்னஞ்சு உகம். பதினைந்துயுகம். காமகாண்டம்-காமகாண்டம் என்னும் வில்லு. இது பூவில்லு. பகழி - அம்பு. (௭)

தத்தலை வேலையன் காணுத வேதத் தனிவனத்து
முத்தலை வேலையன் வெற்பினம் மாது முளரியடி
அத்தலை வேலையன் முட்சொரி பாலை யருஞ்சுரத்து
வைத்தலை வேலையன் பாலென்னை நாடி வரவெண்ணுமே.

(இ-ள்.) தத்து அலை வேலையன் - பாய்கின்ற திரைபொருந்திய திருப்பாற்கடலையுடைய விட்டுணு. முத்தலைவேல்-சூலப்படை. முளரி - தாமரை. அத்தலை - அவ்விடம். வேல் அயல் முள்சொரி - வேலமரங்கள் அயலிலே முள்ளினைச் சொரிகின்ற. அருஞ்சுரம் - அருவழி. அலை வேலை - அலையும்போது.

வரபர சங்கர வேதா ரணிய மடங்கலஞ்சுஞ்
சரபர சங்கர ளம்பொதி வாய்விரித் தையல்பங்கின்
அரபர சங்க ரவிபோ லொளிபி னணிதிகழும்
புரபர சங்கர வாநம ஞர்வரும் போதத்திலே.

(இ-ள்.) வர - வரனே. பர - பரனே. மடங்கல் - சிங்கம். சரப - சரபப் பறவைவடிவினரே. ரசம் - இனிமை. கரளம் - நஞ்சு. அர - அரனே. பரசு அங்க - துதிக்கப்படுகின்ற அங்கமுடையவனே. ரவி - சூரியன். புர - சரீரமுடையவனே. பரசு அம் கர-மழுவைத்தரித்த அழகிய கையையுடையவனே.

போத வனத்த நவிராழி விற்கதை பூட்டுசிலை
மாத வனத்தன் மறுதிக்கெட் டாத வரதனங்கி
ஆத வனத்த நகுமதி மூன்றுக ணன்பொறியார்
வேத வனத்தன் பதம்பேணிற் பாச விலங்கறுமே.

(இ-ள்.) போதவன் - பிரமா. நத்தம் - சங்கு. நவிர் - வாள். ஆழி - சக்கரம். வில்கதை - ஒளிபொருந்திய தண்டு. சிலை - வில்லு. மாதவன்-விட்டுணு. அத்தன் - பிதா. அங்கி - அக்கினி. நத்தம் நகும் மதி - இரவில் விளங்குஞ் சந்திரன். பொறி - இலக்குமி. (க0)

விலங்க லரிக்குலஞ் சூழ்மறைக் காடன் விரிந்ததுழாய்
அலங்க லரிக்கரு மாரூரி லோர்புற் றமர்ந்திருக்கும்
இலங்க லரிக்கட் களக்கறை யானைச்சற் றெண்ணுநெஞ்சே
கலங்க லரிக்குநந் தீவினை யான கருங்கலையே.

(இ-ள்.) விலங்கல் - மலை. அரிக்குலம் - சிங்கக்கூட்டம்- அலங்கல்- மாலை. அரி - விட்டுணு. அலரி - சூரியன். களம் கறையானை - கழுத்திற்கருமையுடையவரை. (கள்ளக்கறையானை) கலங்கல் - கலங்காதே. கருங் கலை- கரிய சீலை. (கக)

கருங்கலை மானுமென் சித்தா சனம்புகுங் கண்ணுதலோன்
அருங்கலை மானுமறை வேதா ரணிய னணிவரை மேன்
மருங்கலை மாதுதிக் கண்முலை யீருங்கள் வார்தடங்கண்
பொருங்கலை மானென்று வந்ததுண் டாகிற் புகன்றிடுமே.

(இ-ள்.) கரும் கலை மானும் - கரிய கல்லினையொத்த. சித்தாசனம் - மனமாகிய ஆசனம். கலைமான் - சரசுவதி. மருங்கு அலை - இடையை அலைக்கின்ற. மா - கருமை. நுதி - நுனி. கண் - சூசகம். கலைமான் - ஆண்மான்.

புகரானை யீரு முரியானை வெண்பொருப் பானையெண்ணம்
பகரானை மேய்த்து வெண்பற்றனை யாற்கைப் பகட்டைக்கவ்வி
யகரானை யச்சுட ராழிதொட் டாற்கரி யானைமறை
நகரானை யன்றிச் சொலாதிறைஞ் சாதென்ற னுச்சிரமே.

(இ-ள்.) புகர் - முகத்திற் புள்ளியையுடைய. எண் அம்பகர் - எட்டுக் கண்களையுடைய பிரமர். ஆன் - பசு. கரா நைய - முதலை வருந்த. நா சொலாது - நாக்குத் துதியாது. சிரம் இறைஞ்சாது - தலை வணங்காது. (கங)

சிரவர விந்தம் புனைமறைக் காடத்ரி சூலங்கொண்ட
கரவர விந்தம் பணித்தோன் மலைத்தென்றற் கன்றுயிர்க
வரவர விந்த மடநடைக் கோமள வஞ்சியிருள்
இரவர விந்த மெனக்கிடந் தாள்பின்னை யென்செய்வளே.

(இ-ள்.) சிர அரவு இந்து அம் புனை - முதன்மையுடைய பாம்பினையுஞ் சந்திரனையும் கங்கையையும் புனைந்த. விந்தம் பணித்தோன்மலை-பொதியமலை. கோமளம் - மென்மை. இரவு அரவிந்தம் என - இரவிற் குவியுந் தாமரைப் பூப்போல. (கச)

செய்யரைக் கோடியன் மாவுரி யாரைச் செழுங்கனன்மான்
கையரைக் கோடி புனைமறைக் காடரைக் கண்ணிற்கண்டாற்
பையரைக் கோடிமின் னுர்மய லால்வரும் பாவமெல்லாம்
ஐயரைக் கோடி யருந்துக ளாகு மறிசித்தமே.

(இ-ள்.) செய்யரை - செம்மையுடையவரை. கோடு இயல் - கொம்பு பொருந்திய. கோடிபுனை - கோடிதீர்த்தம்பொருந்திய. பை அரை - பாம்பின் படத்தினை ஒத்த நிதம்பம். கோடி - சீலை. (கரு)

சித்திர வன்னி கருங் கொங்கை பங்கர்செற் றூர்புரமூன்
றத்திர வன்னிக் கருணைகை யார்க்கிட மாகமநூன்
மித்திர வன்னியும் பூவையுங் கேட்டு வியந்துரைக்கும்
பத்திர வன்னி மருஞ்சேர் மறைசைப் பதியகமே.

(இ-ள்.) சித்திரம் - அழகு. வல் நிகரும் - சூதாடுகருவியை ஒத்த. வன்னிக்கு - அக்கினிக்கு. மித்திரம் - நண்பு. வன்னி - கிளி. பத்திரம் - இலை.

பதிகும் பரிக்குஞ் சூழன்மாத ராயப் பரவையுள்ளே
வதிகம் பரிக்கு நிகர்விழி யாய்மலை மாதுகங்கா
ளிதிகம் பரிக்கு மணியாக மீந்தரு ளீசர்முத்தம்
பொதிகம் பரிக்குந் திரைவேலை வேத புரிவரைக்கே.

(இ-ள்.) பரிகம் - பாசி. பரவை - கடல். வதிக - தங்குக. அம்பு அரிக்கு நிகா - அம்புக்கும் வண்டுக்குஞ் சமமான. கஙகாளி - கஙகாளமுடையவள். திகம்பரி - திக்குவஸ்திரமுடையவள். கம்பு அரிக்கும் - சஙகினை அரித்துவிடுகின்ற. (கஎ)

புரியா ரநந்த னறியாப் பதம்பெறப் பொற்கயிலைப்
பெரியா ரனந்தனை வென்னடை பாகர் பிறப்பினிலங்
குரியா ரனந்த வளமறைக் காட்டைக் குறித்திருந்து
பரியா ரனந்தன் சிரமேற் புவித்தல மானவரே.

(இ-ள்.) ஆரம் புரி நந்தன் - முத்துக்களையீனுகின்ற புரிபொருந்திய சஙகினையுடைய விட்டுணு. அனந்தனை - அன்னப்பறவையினை. அஙகுரியார் - தோன்றுதவர். அநந்தவளம் - அளவற்ற செல்வம். (கஅ)

மானந் தரக்காந் தைப்பட வீர்த்துரி வாங்கினர்கற்
றூனத் தரக்க ரரகட்க வூன்றிய தாளர்குடப்
பானத் தரக்கர விந்தத்தின் மேற்றுயில் பண்ணைமறைக்
கானத் தரக்கர மைந்துணர் வீர்வினைக் கட்டறுமே.

(இ-ள்.) மானம் தரக்கு - மனக்கிளர்ச்சியுடைய புலி. அரந்தை - துன்பம். கல் தானதது - மலையிடத்தில். குடம் பால் நத்து - குடம்போன்ற வெள்ளிய சங்கு. அரக்கு - சிவப்பு. அக்கரமைந்து - ஸ்ரீபஞ்சாக்கரம். (கக)

அறுத்தவித் தாரச் சமைத்தபின் ளைக்குகந் தார்பொதியக்
குறுத்தவித் தார முனிக்கருள் கோலக் குழகராரப்
பொறுத்தவித் தாரணி யேத்தா ரணபுரம் போந்துகரு
வறுத்தவித் தாக்குவ தல்லாது வேறு மருந்தில்லையே.

(இ-ள்.) ஆர சமைத்த - உண்ணுதற்கேற்பப் பாகஞ் செய்யப்பட்ட. வித்தார முனிக்கு - வித்தார கவியைப்பாடும் அகத்தியருக்கு. இத்தாரணி - இப்பூமி. ஆரணபுரம் - வேதாரணியம். கரு - பிறவி. வித்து - விதை. (உ0)

மருக்கர வீரநின் ஞேதியைக் காரென்று மஞ்ஞையெல்லா
முருக்கர வீர வயில்விழி யாய்நட முற்றனைவந்
திருக்கர வீரகத் திச்சே தகன்றந்தை சீர்மறைசை
எருக்கர வீர மதிவேணி வெற்பி னெழிலியன்றே.

(இ-ள்.) கரவீரம் - அலரி. ஓதி - கூந்தல். கார் - மேகம். உருக்கு அரம் - உருக்கினுற் செய்யப்பட்ட அரம். வீரம் அயில் - வீரத்தினையுடைய வேல். அரவு - பாம்பு. ஈரம் மதி - குளிர்ந்த சந்திரன். எழிலி - மேகம். (உக)

அன்றுலி ஞட்டந் துயின்றே னிகரண்ண லேதிருமான்
பொன்றுலி நாட்டநஞ் சுண்டார் மறைசைப் பொருப்பகத்தி
லொன்றுலிநாட்டவழ் கார்போனும்வார்குழலொண்டொடியூர்
குன்றுலி நாட்டவர் கொள்ளா ருனது குளிர்முத்தமே.

(இ-ள்.) அன்று - அக்காலம். ஆலில் - ஆலமரத்தில். நாட்டந் துயின்றோன் - நித்திரைசெய்தவன். திருமான் - இலக்குமி. பொன் தாலி - பொன்னாலாய தாலி. ஒன்று - பொருந்திய. ஆலி நாள் - மழைக்காலம். குன்று - மலைசார்ந்த நிலம். இந்நாட்டவர் - இந்நாட்டிலுள்ளவர். (உஉ)

முத்திரு மாதங்க வார்முலை பாகர் முதுமறைசை
மெய்த்திரு மாதங்க மாற்கரி யாரை விளம்புகிலீர்
பத்திரு மாதங் கருவயி னூறிய பாழுடம்பை
வைத்திரு மாதங்கத் தென்றிசைக் கூற்று வருங்கடைக்கே.

(இ-ள்.) இரும் - பெரிய. மாதங்கம் - யானை. திருமாது அங்கம் மால் - இலக்குமியைச் சரீரத்திலுடைய விட்டுணு. ஆதங்கம் - துனபம். (உ௩)

வருகர நாக மகவான் பதமும் வனசப்பிரான்
பொருகர னாகம் பிளந்தான் பதமும் புகலின்மிக்கோ
ருருகர நாகர் பணிமா முகரத்தன் மூவர்தமிழ்க்
குருகர னாக மருங்குழை யாற்பணி யொண்டவர்க்கே.

(இ-ள்.) கரம் நாகம் - கையையுடைய யானை. மகவான் - இந்திரன். கரன் ஆகம் பிளந்தான் - கரனென்பவனுடைய மார்பினைப்பிளந்த விட்டுணு. அ நாகர் - அந்தத் தேவர். நாகு அமரும் குழையான் - சங்காகப்பொருந்திய குண்டலத்தையுடையவர். ஒண் தவர் - சிறந்த தபோதனர். (உ௪)

ஒண்டூதை யுண்புற வீர்மறந் தாரெம தூரர்முன்னொண்
மண்டூதை யாக்கிய சோறீந் திடமகிழ்ந் தார்வரம்பி
னண்டூதை யால்வெயில் காய்மறைக் காட்டுறை நாகமணி
வண்டூதை யோதிக்குச் செம்பாதி யாதி மணிவரைக்கே.

(இ-ள்.) ஒண் தூதை - ஒள்ளிய கோடாங்கல்லை. மண் தூதை - மண்ணாலாகிய சிறுபாத்திரம். ஊதை - குளிர்காற்று. ஐ ஓதி - ஐவகையாக முடிக்கப்படும் கூந்தல். வரை - மலை. (உ௫)

மணிக்குட நாடகன் மாறன் பதாகை வரித்தநுதற்
கணிக்குட னாடக வாழுமென் றுலிம்மை காயுமையற்
பிணிக்குட னாடகப் பொற்கொன்றை வாங்கும் பெருமறைசை
அணிக்குட னாடக மால்பணி யாதி யரனிடத்தே.

(இ-ள்.) குடநாடகன் பதாகை - குடகநாட்டினையுடைய சேரனது கொடியாகிய வில். மாறன் பதாகை-பாண்டியனுடைய கொடியாகிய கயன் மீன். வரித்த - ஒத்த. நுதல் கணிக்கு - நெற்றியையுங் கண்ணையுமுடைய பெண்ணுக்கு. உடல் நாள் தக - உடம்பு நாட் பெலமுற. மை-ஆடு. ஆடகம்-பொன். பொன் - அழகு. குடநாடகம் - குடக்கூத்து. மால் - விட்டுணு.

இடங்கர டக்கய மேனின்று கூப்பிட் டிரங்குமந்தத்
தடங்கர டக்கயங் காத்தோன் சரமனைத் தையல்கன்ம

கடங்கர டக்கய மேருகு நான்மறைக் கான்புவனி
விடங்கர டக்கய நீர்போ லெனைமுத்தி மேல்வைப்பரே.

(இ-ள்.) இடங்கர் - முதலை. அட - பிடித்து வருத்த. கயம் - குளம். கரடம் - மதம் பாய் சுவடு. சரம் - அம்பு. கல் மகள் - மலைமகள். தம் கர டக்கயம் - தமது கையிலுள்ள கொடி. அயம் அடக்கு நீர் - காய்ச்சிய இரும்பு தன்னுளடக்கிய நீர். (௨௭)

மேல்விண்டு நாயக வில்லார் மறைசை விமலரிடப்
பால் விண்டு வேதன் வலப்பாலு மாகப் படைத்தவர்வா
யால்விண்டு நானிரை சுற்றுஞ் சிலம்பிக் கரசளித்த [லுமே.
போல்விண்டு முத்தருங் கொள்வாரென் றூற்கவிப்புன்சொல்

(இ-ள்.) மேல் - மேலாகிய. விண்டு நாயகம் வில்லார். மலைகளுக்கு நாயகமாகிய மேருமலையை வில்லாகவுடையவர். விண்டு - விட்டுணு. வாயால் விண்டு - வாயால் விட்டு. விண்டு - மூங்கில். புன்சொல் - வழுச்சொல்.

புன்னாக வேலி மறைக்காட ரன்பரைப் புண்டரிக
மின்னாக மாயவ னான்முகன் வாசவன் மேற்பதிக்கு
மன்னாக வைப்பவர் காடோடு மாடு மகிழ்ந்துபுன்றோல்
பன்னாக நஞ்சுடை பூணா தாகப் படைத்தவரே.

(இ-ள்.) புன்னாகம் - புன்னைமரம். வேலி - நிலம். புண்டரிகமின் - இலக்குமி. ஆகம் - மார்பு. ஓடு - கபாலம். புல்தோல் - புலித்தோல். பல் நாகம் - பல்லினையுடைய பாம்பு. உடை - வஸ்திரம். (௨௯)

படைக்கந் தரத்தர் திருமறைக் காடர் பனிவரைமேல்
அடைக்கந் தரத்த நிறத்தா மரைமுகத் தன்னமன்னு
டொடைக்கந் தரத்த மருஞ்சுரு ளோதிச் சுரும்பினங்காள்
இடைக்கந் தரம்வரி னுங்களுக் கேபழி யேற்றிடுமே.

(இ-ள்.) படை கந்தர் அத்தர் - வேற்படையையுடைய கந்தசுவாமிக்குத் தந்தை. அடை கந்த ரத்தநிறம் - இலையையும் மணத்தினையுஞ் சிவப்பு நிறத்தினையுமுடைய. கந்தரத்து அமரும் - மேகத்தினை ஒத்து இருக்கின்ற. அந்தரம் - கேடு. (௩௦)

ஏற்றுக் கொடியர் திருமறைக் கானத்த ரேழுலகப் [டேன்
பேற்றுக் கொடியத்தர் திக்காடை நாதரைப் பேணிக்கொண்
கூற்றுக் கொடியற்கு மஞ்சே னினியிக் குவலயத்தே
தோற்றுக் கொடிவரை கேதன மாதுந் தொலைந்தனளே.

(இ-ள்.) ஏழுலகம் பேற்றுக்கொடி அத்தர் - ஏழுலகத்தினையும் பெறு தலையுடைய உமாதேவிபாகர். ஆடை - சீலை. கூற்று கொடியற்கும் - இயமனாகிய கொடியவனுக்கும். கொடி வரை கேதநம் மாதும் - காகத்தினையெழுதிய கொடியையுடைய மூதேவியும். (௩௧)

நொலைவே தனையர் கருக்குழி வாய்ப்படுந் தொல்லைச்சென்ம
நிலைவே தனையென் றழலூசல் போல நினையுநெஞ்சின்
உலைவே தனைய வொருகாலுஞ் சேலென் றுரைக்கினென்றுங்
கலைவே தனையன் பணிமறைக் காடவென் கண்முனின்றே.

(இ-ள்.) அனையர் - அன்னையர். நிலை வேதனை - நிலைத்த துன்பம். நொலைவு ஏது என்று - நீங்குகை எப்படியாகுமென்று. உலைவு - உலைதல். ஏதம் - குற்றம். வேதன் - பிரமா. ஐயன் - பிதா. (௩௨)

கண்ணாச் சிராக வரிசூழுங் காமறைக் காடர்செந்தீ
வண்ணர்ச் சிராசல மேருவில் லாளி வரைவிடுதேர்
உண்ணச் சிராக விரிக்கால வேலுறை விட்டுவிட்டுப்
பெண்ணச் சிராவல வாவிறங் காது பிடியன்னமே.

(இ-ள்.) கள் நச்சு - தேனை விரும்புகின்ற. வரி - வண்டு. சிராசலம் - பிரதானமலை. உள் நச்சு இராக - உள்ளே நஞ்சினிறத்தினையுடைய. உறை - நீர். அச்சு - உடம்பு. வலவன் - தேர்ப்பாகன். (௩௩)

அன்னம் பலவு நறும்புன்னைச் சேக்கை யமர்மறைசை
முன்னம் பலவன் முடித்த சடாதர மூர்த்திதில்லைப்
பொன்னம் பலவன் பிறைகிடங் காளன் புராந்தகன்சீர்
வன்னம் பலவன் பகட்டி நாதனென் வான்றுணையே.

(இ-ள்.) பலவம் - தளிர். முன் - முதல்வர். அம்பு - நீர். அலவன் - சந்திரன். வன்னம் பலவன் - அட்சரங்கள் பலவற்றையுமுடையவர். (௩௪)

வானப் பிறையையும் வாடைப் புலியையு மையல்செய்யுந்
தேனப் பிறையையுந் தென்றலை யுங்கண்டு சில்லரிக்கண்
மீனப் பிறைக்கு மடமானை மேவிலர் வேடனிடு
மூனப் பிறைச்சிக் குகந்தார் மறைசை யுகந்தவரே.

(இ-ள்.) தேன் அப்பு இறை - தேன்பொருந்திய புட்பபாணத்திற்குத் தலைவனாகிய மன்மதன். கண் மீன் - கண்ணாகிய மீன். அப்பு இறைக்கும் - நீரைச் சொரிகின்ற. ஊன் அப்பு - ஊனையப்பிய. (௩௫)

உகந்தா வடிக்கு மிடையர்தம் பாலளை யுண்டுகேடற்
சகந்தா வடியனுக் கெட்டாத ஞான தலத்து முத்திச்
சுகந்தா வடிதமிழ் நான்மறைக் காட துணைவரியம்
பகந்தா வடிசெல் குழையாண் மருவிய பாகத்தனே.

(இ-ள்.) உகந்து - விரும்பி. ஆ - பசு. அளை - மோர். சகம்-பூமி. தாவு - பாய்ந்தளந்த. வடி தமிழ் - தெளிந்த தமிழ். அம்பகம்-கண். தாவடி-போர். குழை - காது. (௩௬)

பாக னகனி மொழியா யுனது பனிமுகமாங்
கோக னகமில வுந்துணைப் பான்மிற் கோடல்கண்டேன்

நாக நகநிமி ரும்புலிப் பாதரு நாடவன்றா
மாக னகநிலே மன்றுறு வேத வனமலேக்கே.

(இ-ள். பாகு அன கனி - பாகினை ஒத்த கனிந்த. கோகநகம் - தாம ரைப்பூ. துணை - இரண்டு. பானல் - கருங்குவளைப்பூ. கோடல் - காந்தட்பூ. நாகம் - பதஞ்சலிமுனிவர். மன்று - சபை. (கஎ)

மலேக்கார் முகந்தர யாழைப் பழிமொழி மான்குறையா
நிலேக்கார் முகமதி யாம்பங்க னேநிறை காய்க்கந்திரு
முலேக்கார் முகந்திடும் வேதா ரணிய வருந்துயராந் [திலே.
தொலேக்கார் முகந்தமி யேன்சொல்லு மேனென்ன சொன்ன

(இ-ள்.) கார்முகம் தா - வில்லினைத் தரித்தவனே. கந்தி குழலே - கமு கஞ்சோலையை. தொலேக்கார்முகம் - தொலேக்கமாட்டாதவிடம். (கஅ)

சொன்னச் சிலம்பு குழைத்தவில் வான்கரு திப்பதியான்
வன்னச் சிலம்பிக் கரசளித் தான்வெற்பின் மாவிழைகண்
மின்னச் சிலம்பு கலேநீனை யாமன்மெய் வேர்வரும்பச்
சின்னச் சிலம்படி யாய்குழைந் தாயொரு தென்கனேயே.

(இ-ள்.) சொன்னச்சிலம்பு - பொன்மலே. கருதிப்பதி - வேதாரணியம். வன்னம் - அழகு. சிலம்பு கலே - ஒலிக்கின்ற சீலே. குழைதல் - முழுகுதல்.

தேன்றதும் பிக்குளிர் தாமரைப் பீடிகைச் செல்வனும்வாய்
நான்றதும் பிக்கருண் மாயனும் வான்புலி நன்னியநுங்
கின்றதும் பித்தவ ராற்கிட்டு மோகிடை யாவுலகம்
ஈன்றதும் பிக்குழல் சேர்மறைக் காடணி ரண்டையுமே.

(இ-ள்.) ததும்பி - நிறைந்து. வாய் நான்ற - வாய்தூங்கிய. தும்பிக்கு - யானைக்கு. பித்து - மயக்கம். தும்பி குழல் - வண்டு வீழுங் கூந்தல். (உ0)

இரண்டந் தகரங் கிருந்தன்ன பார்வையி னைச்சுரும்பார்
புரண்டந் தகர மனவிய கோதையைப் பொன்னில்வைத்தார்
முரண்டந் தகரவை வேலா கடற்றிரை முத்தஞ்சங்கங்
குரண்டந்தகர வெறிமறைக் காடன் குளிர்கிரிக்கே.

(இ-ள்.) இரண்டு அந்தகர் - இரண்டு இயமர்கள். பார்வை - கண். அம் தகரம் - அழகிய மயிர்ச்சாந்து. முரண்தந்த - போர்செய்கின்ற. வை - கூர் மை. குரண்டம் - கொக்கு. தகர - சிதற. (உக)

கிரிதா ரகையனிந் தாலென்ன முத்தங் கிடந்தகொங்கை
அரிதார மன்னவ ளப்பகங் காட்டு மருக்கன்மதி
எரிதார வெற்பு விழியா சனத்த னெழின்மறைசை
விரிதா ரகப்பொரு ளானே றுகந்தவன் மெய்யொளியே.

(இ-ள்.) கிரி - மலே. தாரகை - நட்சத்திரம். அரி - விட்டுணு. தாரம் - மனேவி. எரி - அக்கினி. தாரவெற்பு - வெள்ளிமலே. தாரகம் - பிரணவம். ()

மெய்த்துத் தியான பணியா பரணன் விரைமருவுங் [ணிப்
கொத்துத் தியானஞ் செறிமறைக் காட்டுறை கோனை யெண்
பொய்த்துத் தியானம் புறுசெருக் கற்றுப் புலனடங்க
வைத்துத் தியான சமாதிசெய் வார்க்கில்லை வன்பிறப்பே.

(இ-ள்.) துத்தி - புள்ளி. பணி - பாம்பு. உத்தியாநம் - சோலை. உத்தி- பொருந்துமாறு. தியாநம் - கடவுளிடத்தே மனத்தினைப் பொருத்துதல். சமாதி - கடவுளோடு வேறுகாது நிற்றல். (சங)

வன்போதகவல் லியநெடுங் கான்சென்று மார்புடம்பின்
என்போ தகவல் லியமா தவம்புரிந் தேனினிப்பீர்
பொன்போ தகவல்லி யன்பார் சுருதி புரத்தபத்தர்
அன்போ தகவல்லி யங்கொன்றை யாயென் றறைந்திடுமே.

(இ-ள்.) போதகம் - யானை. வல்லியம் - புலி. என்பு - எலும்பு. ஓதக- நீங்க. வல்லிய - வலிய. பொன் - இலக்குமி. போதகவல்லி - சரசுவதி. அன்பு ஓது - அன்போடு துதிக்கின்ற. (சச)

அறைக்கண் டவழரு விக்கிரி வேத வனத்தண்மினும்
மறைக்கண்டரிய பிரானிறந் தாரைப் பொன்மானத்துய்த்துப்
பிறைக்கண்ட வேணியிற் பாணியும் பாணியிற் பேர்மழுவுங்
கறைக்கண்ட முந்தரச் செல்லுதல் பார்த்தி கருங்குழலே.

(இ-ள்.) அறைக்கண் - முழையிலே. மறைக்கு - வேதத்திற்கு. அண்டரிய - அண்டுதற்கரிய. பாணி - நீர், கை. கறைக்கண்டம் - காளகண்டம். ()

கருமந் திரிகர ணம்வேறு மாறு கயவர்ப்பற்றித்
தருமந் திரியு மெனையாள்வை யோவெற்றித் தானவர்தம்
பெருமந் திரினைய புதரத்தில் வைத்த பிரானளகை
ஒருமந் திரிநண்பனே மறைக் காட்டுறை யுத்தமனே.

(இ-ள்.) கருமம் - செயல். திரி - மூன்று. கரணம் - கருவி. மந்திரி- அமைச்சன். உதரம் - வயிறு. மந்திரி - குபேரன். (சக)

உத்தம ரத்தி யுரியார் மறைசை பொருத்தர் வெள்ளோ
லத்தம ரத்தி னிறைகங்கை வேணிய ராலெரிந்த
நத்தம ரத்தி முரசான் செழுங்கணை நல்கமுன்னாள்
வைத்தம ரத்தின் மெய்த் தூரில்வெந் நீர்விடு மங்கையரே.

(இ-ள்.) அத்தி - யானை. தமரம் - ஒலி. நத்து - சங்கு. அத்தி - கடல். கணை - அம்பு. தூர் - வேர். மங்கையர் - பெண்கள். (சஎ)

மங்கல மந்தர முன்னுத நின்கண்ட வண்ணங்கண்டு
சங்கல மந்தர வங்கொண்டு கூனிச் சுரிமுகஞ்சார்ந்
திங்கல மந்தர மத்தான் கையிற்புக் கிருந்ததுநா
கங்கல மந்தர தம்புவி யான்மறைக் கானமின்னே.

(இ-ள்.) அந்தரம் - கேடு. கண்டம் - கழுத்து. அலமந்து - சுழன்று. அரவம் - ஒலி. நாகம் - பாம்பு. அந்த ரதம் - அழகிய தேர். (சஅ)

கானவன் டானக் களிற்றறைவர்க் காகக் கழுவிற்றங்கு
மானவன் டானது காணுத தாமரை யானுஞ்செவ்வி
ஞானவண் டானக் கறைவோனும் வாவியி னூடிக்கொத்து
மீனவன் டானந் திரிமறைக் காட்டுறை வித்தகனே.

(இ-ள்.) வண் தாநம் - வண்மையான மதம். ஐவர்-பாண்டவர். தானம்-இடம். வண்டானம் - கொய்யடிநாரை. வித்தகன் - சாதுரியர். (சகூ)

வித்தந் தியாக முதவா வுலோபர்க்கு வீணிற்சொற்பாட்
டைத்தந் தியாக பதியென்ப ரான்முத லாம்பின்னையை
மைந்தந் தியாகப் பெறுமறைக் காடர் வயங்குமுன்னைச்
சித்தந் தியாக தியாகரைப் பாடிலர் தீங்கறவே.

(இ-ள்.) வித்தகம் - பொன். தியாகம் - கொடை. பாட்டைத்தந்து-கவிபாடி. யாகபதி - இந்திரன். மை தந்தி - கரிய யானை. சித்து - அறிவுடைப்பொருள். அந்தி ஆகம் - செக்கர்மேகம்போன்ற சரீரம். (ரு0)

தீங்கரும் பாரஞ் சொரிவயல் வேதத் திருவனத்துக்
கோங்கரும் பார மணிமுலைச் சாமளக் கோமளப்பெண்
பாங்கரும் பாரண சூலாயு தாவிப் படிவச்சுமை
தாங்கரும் பார மினிப்பிற வாமுத்தி தந்தருளே.

(இ-ள்.) தீம் - இனிமை. ஆரம் - முத்து. ஆரம் - சந்தனம். சாமளம் - பச்சை. கோமளம் - மென்மை. உம்பா - தேவனே. ரணம் - போர். தாங்க அரும்பாரம் - தாங்குதற்கரிய பாரம். (ருக)

தந்தம் படைத்த களிறென்று தாக்கந் தனிபுரந்து
நுந்தம் படைத்தலை வேல்விழிக் கன்னியை நோக்கியதால்
நந்தம் படைக்குலைச் சால்வழி யூர்ந்திடு நான்மறைசை
இந்தம் படைத்த சடையான்வெற் பாடவ ரெண்சிங்கமே.

(இ-ள்.) தந்தம் - கொம்பு. களிறு - யானை. நுந்தம் - நும்முடைய. நந்தம் - சங்கு. படை - கலப்பை. இந்து அம்பு அடைத்த - சந்திரனையும் நீரையும் உள்ளடக்கிய. (ருஉ)

சிங்க முருக்குவன் றென்கால னாவியைச் செப்பிலின்னே
கங்க முருக்குர னைவிருந் துண்ணக் கனத்திடுமென்
னங்க முருக்கும் பிணியங்கு மிங்கு மலையவைத்தாய்
பங்க முருக்கிதழ் சேர்மறைக் காட்டுறை பண்ணவனே.

(இ-ள்.) சிங்க - குறைய. முருக்குவன் - கெடுப்பன். கங்கம் - பருந்து. உரு குரல் - அச்சங்கொடுக்கும் ஒலி. அங்கம் - சரீரம். பங்கு - பாகம். அம் - அழகு. முருக்கு இதழ் - முருக்கம்பூவினையொத்த அதரத்தையுடைய பெண்.

பண்ணா முதலையின் சொல்லிபங் காளன் பகைவிடம்வன்
கண்ணா முதலைபி னேமியை யேவிய கண்ணனுயிர்
உண்ணா முதலையின் றோன்மறைக் காடனை யுண்டென்பதே
எண்ணா முதலையின் கானிடைப் பூவி லினிநெஞ்சமே.

(இ-ள்.) பண் அமுது அலை - பண்ணினையும் அமுதையும் அலைக்கின்ற. விடம் - நஞ்சு. வன்கண் - தறுகண். நேமி - சக்கரம். அயின்றோன் - உண்டவர். அமுது - நீர். அலையின்கான் - கடல். (௫௪)

நெஞ்சத் திருக்கு மதிநீயைம் பூத நிலயமுநீ
கஞ்சத் திருக்கு மரிசேருங் கண்ணனெண் கண்ணனுநீ
வெஞ்சத் திருக்கு மலமாயை நீங்கிய மாதவத்தோர்
தஞ்சத் திருக்கு வனத்துறை காரண தற்பரனே.

(இ-ள்.) நெஞ்சத்து - மனத்தில். மதி - புத்தி. நிலயம் - வாசஸ்தானம். கஞ்சம் - தாமரைப்பூ. திரு குமரி - இலக்குமியாகிய பெண். எண்கண்ணன் - பிரமா. திருக்கு - மாறுபாடு. இருக்கு வனம் - வேதாரணியம். (௫௫)

தற்கோல மென்ற கனிவாயை வேட்டுத் தயங்குமணிப்
பொற்கோல மென்றவி யேன்காண் குவன்புவி புக்கிடந்த
முற்கோல மென்ற விசம்புயன் போகி முதலமரர்
நிற்கோல மென்ற பொழுதால முண்ட நிருமலனே.

(இ-ள்.) தற்கோலம் - தக்கோலம். கோலம் - பன்றி. தவிசு - ஆசனம். அம்புயன் - பிரமா. போகி - இந்திரன். ஓலம் - அபயம். ஆலம் - நஞ்சு. (௫௬)

நிருமல ரஞ்சனை சேய்பணி மாலத்தர் நீள்விசயற்
பொருமல ரஞ்ச நயந்திடும் வேதபு ரிவரைக்கோன்
மருமல ரஞ்சனை யன்னார் மழர்சொல் வருவர்வன்கண்
ணருமல ரஞ்சனை யாதொழி யாய்மதி யாய்மனமே.

(இ-ள்.) நிருமலர் - மலமில்லாதவர். அஞ்சனை சேய் - அஞ்சனையென்பவளுடைய புத்திரனாகிய அநுமான். அஞ்சம் - அன்னம். மரு மலர் - பரிமளமுடைய பூ. அஞ்சல் - பயப்படாதே. நையாதொழி - வருந்தாதே. (௫௭)

மனக்காக்கை மூவர் தமிழ்க்குயில் வாணியை வைத்த குழை
உனக்காக்கைவஞ்ச வினையேன் புன்னுவி னுரைத்ததமிழ் [ற்சந்
சினக்காக்கை வாயி னுறுங்கூற் சொல்லொக்குஞ் சேண்முகி
தனக்காக்கை நீட்டு மறைக்காட்டில் வாழ்சிவ சம்பரனே.

(இ-ள்.) காக்கை - காத்தல். வாணி - வார்த்தை. ஆக்கை - சரீரம். காக்கை - காகம். சந்தனக்கா - சந்தனச்சோலை. சிவ, சம்பு, அரன். (௫௮)

சம்பாதி யந்தச் சடாயுவும் போற்றுந் தலைவன்புரம்
வெம்பாதி யந்த மிலாமறைக் காடனை வரைநகுழலைசா

செம்பாதி யந்தன் சமயமல் லாது திரிநெஞ்சமே
நம்பாதி யந்தகர் பொல்லாச் சமயங்க ணன்றெனவே.

(இ-ள்.) சம்பாதி அந்தச் சடாயுவும் போற்றும் - அருணன் பிள்ளைகளாகிய சம்பாதியும், அந்தச் சடாயுவுந் துதிக்கின்ற. ஆதி - முதல். அந்தம் - முடிவு. செம்பாதி - ஒத்த பாதி. நம்பாதி - நம்பாதே. அந்தகர் - குருடர். நன்று என் - நல்லதென்று. (ருகூ)

நன்றென் புலமைந்தில் வாயொன்று மேநவை யாயினுஞ்சீர்
நின்றென் புலவு கறையாக்கை நுஞ்சுமுன் னீள்பொதியக்
குன்றென் புலவர்முன் னோர்கவி யாயினுங் கூறியதால்
வன்றென் புலவனைத் தாக்கிய வேத வனத்தனையே.

(இ-ள்.) நன்று - நல்லது. நவை - குற்றம். என்பு - எலும்பு. தென்புலவன் - இயமன். (கூ0)

வனக்கோதை யேயு மறுகா றுவைத்து வண்டேன்பிழிந்த
கனக்கோதை யேனவித் திக்கும் பாட்டிய கட்டிநல்கா
தெனக்கோதை வாரித் திருவே டிகிமலி யென்றமிழ்விற்
பனக்கோதை பால்விடு நான்மறைக் காடன்பணிவரைக்கே.

(இ-ள்.) கோதை - மாலை. அறுகால்-வண்டு. கோதை-கூந்தல். துறைத- ஒலி. வாரி - கடல். விற்பனம் - சொற்பொருளுணர்ச்சி வன்மை. கோதை- சேரன். (கூக)

பனிச்சந் திரனணி வேணியுந் தாங்குஞ்செய் பஞ்சிறுட
னனிச்சந் திரளன்னத் தூவியிற் சேக்குமஞ் சீறடிபாற்
றனிச்சந் திரவி னடந்தான் சிகர தலம்பொலிமே
நினிச் சந்திரவரை வில்லான் மறைசையிற் செந்துருவே.

(இ-ள்.) வேணி - சடை. அனிச்சம் - அனிச்சம்பூ. சந்து - தாது. இரவில் - இராக்காலத்தில். சந்திரவரை - பொன்மலை. செந்து - புழு. உரு- வடிவம். (கூஉ)

உருப்பவ ஞசன வாய்த்தேரை யிற்பிணிக் குள்ளுடைந்தேன்
கருப்பவ நாச நதிமணி கன்னிகைக் நான்மறைசை
நெருப்பவ ஞசன காதுயா ம்தசக நளபதுமத்
திருப்பவ ஞசனப் பாற்கட லான்பணிந் தேத்திறையே.

(இ-ள்.) பவஞசநம் - பாம்பு. கரு பவம் - கருவிற்றோன்றியபிறவி. நெருப்பவஞ - நெருப்பின் நிறமுடையவரே. பதுமத்திருப்பவன்-பிரமா. (கூரு)

எத்திரப் பாண்டி யென்னவைய மேற்கு மிறைவன்மதிக்
கோத்திரப் பாண்டிய ஞகிமண் ணுண்டவன் கோலநகைக்
காத்திரப் பாண்டின் மறைக்கா டனைமல காயமென்னுஞ்
சூத்திரப் பாண்டி யெறுமிறுங் காணுந் தொழுமுன்னமே.

பன்னா முதலையின் சொல்லி [illegible]
கன்னா முதலையி னேமிஞ்ஞ [illegible]
உண்ணா முதலையின் [illegible]
எண்ணா முதலையின்

(இ-ள்.) பண் [illegible]
விடம் - நஞ்சு. [illegible]
அமுது - நீர் [illegible]

[illegible]

[illegible] திருமறைக்
[illegible] [illegible] முயங்கான
[illegible] [illegible] சோபா
[illegible] [illegible] னெரு சிலை யுண்டு தற்கே.

[illegible] [illegible] இமையாத அம்பகர் - இமையாத கண்களையுடைய தேவர் [illegible] - [illegible]யுடையவரே. பகவன் - பிரமா. சென்னி துளக்கு - தலை [illegible]. க்ஷமை - பொறுமை. ஆதவம் - வெய்யில். பகல் - சூரியன். உமை உம்மை. யாது அவம் - யாது குற்றம். பகரார் - சொல்லார். வேடன் - கண்ணப்பன். (சுசு

உண்டலத் தானையன் பின்வந்த வண்டின மூசுந்துழாய்க்
கொண்டலத் [illegible]னைய நஞ்சுடர் மூன்றையுங் கொண்டமுடி
மண்டலத் தானையன் கொண்டாடும் வேத வனத்தின்சிறு
கண்டலத் தானையன் றீருரி வாங்குங் கருணையெற்கே.

(இ-ள்.) அலத்தானையன் - கலப்பைப் படையையுடைய பலபத்திரன் துழாய்க்கொண்டல் - விட்டுணு. அத்தான் - மைத்துனன். நயனம் - கண் முகமண்டலத்தான் - முகவட்டமுடையவர். அயன் - பிரமா. சிறுகண் தலத்து ஆனை - சிறிய கண்ணையுடைய யானை. கருணை உண்டு - கிருபை உண்டு எற்கு - எனக்கு. (சுஎ

எற்பதங் கன்று வளர்சோம னங்கி யிவர்செய்கையாய்
நிற்பதங் கன்று திருமறைக் காடனிறை வைகுந்த
நற்பதங் கன்று நிரைமேய்த் தவற்கரு ளுதன்பெண்பாற்
சிற்பதங் கன்று மெனச்சென்ற தூதன் செயல்வண்ணமே.

(இ-ள்.) எல் - பகல். பதங்கன் - சூரியன். து - சுத்தம். சோமன் - சந்திரன். கன்று நிரை - கன்றையுடைய பசு. கன்றுமென - வருந்துமென

வண்ணவெண் கண்ணன் மறையா னுறைமறைக் காட்டிறைவர்
திண்ணவெண் கண்ணன் மதமாத் திரியுஞ் சிலம்பகம்பூ

...வெண் கண்ண னிலையே நிதம்ப முயர்சுருதிப்
...வெண் கண்ணன் மனையே முகநண்ப பைந்தொடிக்கே.

...ம் - அழகு. கள் நல் வெண் மலரயாள் - தேன்பொருந் ...மலரிலிருக்குஞ் சரசுவதி. திண்ண எண்கு - வலிமை ...ரடி. அண்ணல் - பெருமை. சிலம்பு அகம் - மலை இடம். கண் ...னு. எண்கண்ணன் - பிரமா. (சுக)

தொடிப்பாணி நித்திரை யாகாளென் காதிற்றுளைக்குமட்டோ
நொடிப்பாணி னித்தில தென்னும் விழுமழு நோமிப்பிவாய்
வெடிப்பாணி நித்தில மையோ அடுமெனும் வேதவன
முடிப்பாணி நித்தியப் பெம்மான் பவனி முறையிற்கண்டே.

(இ-ள்.) தொடிப்பாணி - வளையலைத் தரித்த கையையுடைய பெண். நொடிப்பாண் - சொல்லப்படுகின்ற பாட்டு. விழும் - விழுவாள். வெடிப்பு- வெடித்தல். ஆணி - வைரம். பாணி - நீர். பவனி - உலா. (எ௦)

கண்டங் கடுத்தவி ரமுமாலை வேதன் கழிந்ததலை
முண்டங் கடுத்த மிசைந்திடும் வானின் முளைத்தபிறைத்
துண்டங் கடுத்த நுதலிம யாசலத் துய்யபச்சைப்
பெண்டங் கடுத்தது பார்மறைக் காட்டுறை பேரொளிக்கே.

(இ-ள்.) கண்டம் - கழுத்து. கடு - நஞ்சு. துத்தம்-பால். கடுத்த-ஒத்த. நுதல் - நெற்றி. பெண்டு - பெண். அங்கு - அவ்விடம். (எக)

ஒளியா னிறையுந் திவாகரக் கண்ண னுலகத்துயிர்
அளியா நிறையுந்தி யம்புயன் வேதற் கருஞ்சின்மய
வெளியா னிறையுந்தி முந்நீர் மறைசையில் வெற்பணங்கே
தெளியா னிறையுந் திகைத்தங் கிரேன்வந்து சேருவனே.

(இ-ள்.) ஒளியால் - பிரபையினுல். அளியா நிறை - காத்து நிறைந்த. இறை - தலைவன். உந்தி - யாறு. இறை - அற்பம். (எஉ)

சேரு வரிக்கடை யாளமில் லாவுருச் சித்தசர்போல்
ஆரு வரிக்கடை யேநிற்ப ராலணங் கேசெழும்பூந்
தாரு வரிக்கடை பண்பாடும் வேதத் தலத்திறைமுந்
நீரு வரிக்கடை வெங்காள போசன னீண்மலைக்கே.

(இ-ள்.) இக்கு அடையாளம் - கருப்புவில்லாகிய அடையாளம். சித்தசர் - மதனர். உவர் ஆர் - உவர் யாவர். தாரு - மரம். வரிக்கடை - வண்டு. உவரி - கடல். கடை - இடம். காளம் - நஞ்சு. (எங)

நீண்ட வராக மலைமா நிலங்கிண்டி நின்றறியான்
நாண்ட வராக மலைகுனித் தான்மறை நற்பதியான்

மாண்ட வராக மலையாமல் வைப்பவன் வான்புகழை
வேண்ட வராக மலைக்குமுன் றேன்றும் வெறுந்தௌவையே.

(இ-ள்.) வராகம - பன்றி. நாண் தவராக - நாண்பூட்டும் வில்லாக. மாண் தவர் ஆகம் - மாட்சிபொருந்திய தபோதநருடைய சரீரம். கமலை - இலக்குமி. தௌவை - மூதேவி. (எச)

வெறும்பத்தி நிச்சயமில்லேனை யாட்கொண்டு வீட்டில்வைப்
புறும்பத்தி னிற்பத்து மாமகன் மாலய னும்பருக்கும் [பாய்
எறும்பத்தி நிற்குங் கடைமுத லாவி யெவைக்குமருள்
பெறும்பத் தினிபங்க னேமறைக் கானப் பெருஞ்சுடரே.

(இ-ள்.) பத்தி - அன்பு. பத்தினிற்பத்து மாமகன் - நூறு யாகங்களை யுடைய இந்திரன். அத்தி - யானை. கடை - இறுதி. பத்தினி - மனைவி.(எரு)

பெருங்காசி னித்தலங் கொண்டாடி யாடிப் பிறங்குகங்கை
அருங்காசி நித்த முறைவோர் மறைசை யமலர் வெற்பின்
மருங்காசி னித்தலை கொள்ள விடாதென்ன மார்பகத்தே
பருங்காசி னித்தகைப் பூண்கொங்கைமங்கைக்குப்பாரித்ததே

(இ-ள்.) காசினி - பூமி. மருங்கு - இடை. ஆசு - அற்பம். காசு - இரத் தினம். பாரித்தல் - பருமையாதல். (எசு)

பாரிக்கு மார முலையுமை யாட்கும் பகீரதியா
நாரிக்கு மாரப் புரமுஞ் சிரமு நயந்தளித்தான்
மூரிக்கு மாரனைத் தந்தான் மறைசையின் மூர்த்திதந்தான்
தாரிக்கு மாரனுக் கில்லையென் மேற்பகை சாதிப்பதே.

(இ-ள்.) ஆரம் - முத்து. பகீரதி - கங்கை. நாரிக்கும் - பெண்ணுக்கும். ஆர - பொருந்த. புரம் - சரீரம். மூரி - வலிமை. குமாரன் - குமாரக்கடவுள். தார் - மாலை. இக்கு மாரனுக்கு - கருப்பம்வில்லினையுடைய மன்மதனுக்கு.

சாதிப்ப ராகம மென்பயன் வேட்டுவன் சாதிப்புழு
வேதிப்ப ராகம் பெறல்போல மெய்க்குரு வாற்பெற்றியான்
பூதிப்ப ராக மணிந்தன்ப னுவதெப் போதருளாய்
ஆதிப்ப ராகவி னுன்மறைக் கானத்தெ ணம்புயனே.

(இ-ள்.) வேதிப்ப - விகாரப்படுத்த. ராகம் - நிறம். பூதி - திருநீறு. பராகம் - தூள். ஆதிப்பரன் - ஆதிகடவுள். எண் அம்புயன் - எட்டுப்புயன்.(எஅ)

புயற்கூடு போம்பொழில் வேதாரணியன்பொன் னுட்டகத்தே
மயற்கூடு மாடவர் நாரிய ராருயிர் வாரியுண்ணு
முயற்கூடு தாக்க விருற்கூடுடையு முடிச்சிலம்பா
கயற்கூடு கண்ணிடை யாகாசந் தீட்டுதல் கைக்கரிதே.

(இ-ள்.) புயற்கு ஊடு - முகிலுக்கிடையில். பொழில் - சோலை. முயற்கூடு - சந்திரன். இருற்கூடு - தேன்கூடு. நீட்டுதல் - எழுதுதல். (எக)

அரிதிரி கைக்கு வடுவாழ் மறைசை யரன்வருமை
பெரிதிரி கைக்கு வந்தாண்டான் மெய்ஞ்ஞானம் பிறங்குசுடர்
விரிதிரி கைக்கும் வினையே னிடத்தில் விளங்கு மட்சக்
கிரிதிரி கைக்கு நிகராம் பிறப்புங் கெடுவிப்பனே.

(இ-ள்.) அரி - சிங்கம். திரி கைக்குவடு - திரிகின்ற யானை. இரிகைக்கு-ஓடுதற்கு. உவந்து-விரும்பி. கைக்கும்-வெறுக்கின்ற. சக்கிரி-குயவன்.

கெடுப்போனகந்தையைநான்முகன்கேசவனூர்க்குமுண்டோன்
கடுப்போனகந்தையல்பங்கில்வைத்தான்மறைக்கானுவந்தான்
நடுப்போ னகந்தை யுடையான் சிலம்பினம் மாதையொப்பாய்
வடுப்போ னகந்தை மணிமுலை நின்குறை மற்றிலையே.

(இ-ள்.) கேசவன் - விட்டுணு. கடு போனகம் உண்டோன் - நஞ்சாகிய உணவையுண்டவர். வடு நகம் தை - தழும்பாக நகம் தைத்த. போல் - அசை.

மற்றலத் தேரைய மின்றிநெஞ் சேயென்ன மாயங்கொல்லோ
முற்றலத் தேரை விடுஞ்சாலிற் சங்கமுழங்கு பண்ணைப்
பொற்றலத் தேரை மறைமறைக் கானப் புனிதன்கல்லுட்
பற்றலத் தேரைக்கு மேயளந் தானைப் படிப்படியே.

(இ-ள்.) மற்று அல - வேறொன்றல்ல. ஐயமின்றி தேர் - சந்தேகமின்றித் தெளிதி. ஏரைவிடும் - கலப்பையை விடுகின்ற. பொன் தலத்து ஏரை - தேவுலகத்தினழகை. பற்றல் அ தேரைக்கும் - பற்றுதலுடைய அத்தேரைக்கும். எப்படி - எவ்வாறு. (அஉ)

படிகந் தனையனை யான்மறைக் காடன்பொற் பாணியில்வேல்
பிடிகந் தனையருள் டாதைய னாடகப் பேரவனைக்
கடிகந் தனைமுகில் காணனை யேத்தக் கருதுநெஞ்சே
விடிகந் தனைய மடவார் கலக விழிமையலே.

(இ-ள்.) படிகம் - பளிங்கு. பாணி - கை. கந்தனை அருள் - முருகக்கடவுளைப்பெற்ற. ஆடகப்பேரவன் - இரணியன். கந்து அனை முகில் - தூணை மாதாவாகவுடைய முகில்போலும்விட்டுணு. இகந்துவிடு-தள்ளிவிடு. அனைய-அந்த. கலகம் - போர். (அங)

மையகற் றனை முகன்றுதை மாணிக்க வாசகனை
மெய்யகற் றனை மகிழ்மறைக் காடனை வேண்டியுன்னுஞ்
செய்யகற் றனைமுக் கோலந்த ணீர்சுரஞ் சென்றனரோ
துய்யகற் றனைப் புரந்தானன் றனுநந் தோகையுமே.

(இ-ள்.) மை அகற்று - மயக்கத்தினை நீக்குகின்ற. ஆனை முகன் - விநாயகன். கற்றானை - பண்டிதனை. செய்யகல் தானை - செங்கிறமுடைய கற்பொடிகலந்த நீரிலே தோய்த்த சீலை. அந்தணீர் - வேதியரே. சுரம் - அருவழி. கற்றானை - கன்றையுடைய பசுவை. (அச)

தோகை யிராமன் மதன்பாண மங்கந் துளைத்தசது கார்
ஈகை யிராமன் விதிகற்ப மானதென் மீதிற்சற்று
மோகை யிராமன் மறந்தா ரிராவண னுட்கவென்ற
வாகை யிராமன் பணிமறைக் காடர்வந் தாரில்லையே.

(இ-ள்.) தோகையிர் - பெண்களே. ஆ - அந்தோ. அங்கம்-சரீரம். கார்-கருமை. ஈகை - கொடுத்தல். மன் - நிலைபெறு. விதி - பிரமா. ஓகை - மகிழ்ச்சி. இராமல் - இல்லாமல். வாகை - வெற்றி. (அரு)

வந்தித்திக் குங்கணை யுங்கொண்ட வேள்பணி மான்குழற்கா
டுந்தித்திக் குங்கனி வாயும்வெண் மூரலு மொண்குழையும்
பந்தித்திக் கும்பெறத் தோன்றிய வேதப் பதியன்பொற்றா
ளந்தித்திக் குந்தகு மென்னமன் றூடு மரன்கிரிக்கே.

(இ-ள்.) வந்தித்து - புகழ்ந்து. இக்கும்-கருப்பம்வில்லும். தித்திக்கும்-இனிக்கின்ற. மூரல் - பல்லும். பந்தி - வரிசை. பொன் தாளம் - அழகிய தாளம். (அசு)

அரம்பையயங் காட்டக வேதா ரணியத்த னுவியச்சுக்
குரம்பையங் காட்டவல் லான்சித சித்தன் குரூஉசசடிலச்
சிரம்பையங் காட்ட வணிந்தோ னரவிந்தச் சேவடியென்
பரம்பையங் காட்ட வெரிமுன்பஞ் சாகப் பறந்திடுமே.

(இ-ள்.) அரம்பை - வாழை. ஆவி - உயிர். அச்சு - உடம்பு. குரம்பை-கூடு. அங்கு - அவ்விடம். சிரம் - சிரசு. பயம் - நீர். பயம் - அச்சம். என் பரம் - எனக்கு மேலது. (அஎ)

பறக்கும் பருந்துவக் குங்கழி யூன்முடைப் பற்றுளதாய்
இறக்கும் பருந்துவக் காக்கையை நீக்கி யிணிப்பொதிய
அறக்கும் பருந்து தமிழ் மறைக் காடனருளைக்கொண்டு
துறக்கும் பருந்துதித் தற்கரி தாமுத்தித் தொல்கதவே.

(இ-ள்.) பருந்து உவக்கும் - பருந்து விரும்புகின்ற. துவக்கு - தோல். ஆக்கை - உடம்பு. கும்பர் - அகத்தியர். துறக்கு - திறப்பேன். உம்பரும்-தேவரும். (அஅ)

கதவாயு நீரங்கி மண்கா யமான கடவுளனை
உதவாயு மப்பனு மானவன் வேத முனிறவனத்தான்
பதவாயு தக்கொடி வேடாதை கீர்த்தியைப் பாடுதற்குச்
சதவாயு நாவுந்தந் தானில்லை வாணி தலைமகனே.

(இ-ள்.) கத வாயு - வேகத்தையுடைய காற்று. அங்கி - நெருப்பு. காயம் - ஆகாயம். ஆயும் - மாதாவும். புதவாயுதம் - கோழி. வேள் - முருகக்கடவுள். சதம் - நூறு. வாணி - சரசுவதி. தலைமகன் - தலைவன். (ருகூ)

மகர சலந்தர ளந்தரு வேத வனத்தன்புய
சிகர சலந்தர னுவியுள் டானடல் சேர்ந்திலங்கு,
முகர சலந்தர வாலாச ளுவுரி யங்கையொற்றை
புகர சலந்தரப் போர்த்தா யெனவினை பொன்றிடுமே.

(இ-ள்.) மகரசலம் - மகரமீனையுடைய நீராகிய கடல். தரளம் - முத்து. சிகரம் - மலை. உகர - உகராக்கரமானவரே. சலம் தர - கங்கையைத் தரித்தவரே. ஆலாசன - நஞ்சை உண்டவரே. (கo)

பொன்றுதை யம்புயத் தின்கால னஞ்சிப் புரண்டுவிழ
நின்றுதை யம்புயத் தான்மறைக் காட னிழல்வெற்பினீர்
ஒன்றுதை யம்புயங் கம்வாய் விழுங்கிய தோமணித்தேர்
என்றுதை யம்புயன் மூடிய தோநின் றியம்பிடுமே.

(இ-ள்.) பொன் றுதை - அழகு நெருங்கிய. ஐயம் - சந்தேகம். புயங்கம் - பாம்பு. என்றுதயம் - சூரியோதயம். புயல் - மேகம். (கக)

இயக்கோடை யாம்பன் முடிசூழ்ந்த னேத்து மிறைவவண்டு
முயக்கோடை யாம்பன் மலர்மறைக் கான்முத லேசுருதிச்
சயக்கோடை யாம்பன்முத் தேயடி யேன்சட் டகம்விடுநாண்
மயக்கோடை யாம்பன் மருந்தேநின் பார்வை வழங்குதியே..

(இ-ள்.) இயக்கு - இயக்குகின்ற. ஓடை - பட்டம். ஆம்பல் - யானை. ஓடை - நீர்நிலை. சயம் - வெற்றி. கோடை - குதிரை. ஆம்பல் - மூங்கில். மயக்கோடு - மயக்கத்தோடு. ஐ - சிலேட்டுமம். (கஉ)

குதிக்குஞ் சிதரரிக் கட்கயற் பாவை கொழுநன் மன்றிற்
சதிக்குஞ் சிதநடத் தான்கொன்றை மாலை தவழ்குழவி
மதிக்குஞ்சி தங்கிய வேணியன் வேத வனத்தலத்தில்
உதிக்குஞ் சிதலை யெறும்பாதி பேற்றை யுரைக்கரிதே.

(இ-ள்.) சிதர் அரி கண் - சிதர்ந்த வரியையுடைய கண். சதி - தாளவொத்து. குஞ்சிதநடம் - காலை வளைத்தாடுங் கூத்து. குஞ்சி-குடுமி. சிதலை-கறையான். (கங)

உரைத்தென்ன வன்மை பரன்மறைக் கானுறை யோங்கன்முதி
னிரைத்தென்ன வன்மலி பூங்குழ லாளொஞ் செனுமிரும்பைக்
கரைத்தென்ன வன்னகைப் பூண்மார்ப னுசேரக் கருதுபொதி
வரைத்தென்னன வன்கொடி சாடிய வேல்விழி வாணகையே,

(இ-ள்.) வன்மை - வலிமை. ஓங்கல் - மலை. நிரைத்து என்ன - நிரைத்தாற்போல. அல் - இருள். என்ன - என்னுடைய. தென்னவன்கொடி - பாண்டியனுடைய கொடியாகிய கயல். சாடிய - வென்ற. (௬௪)

வானண்ட ருண்டி வழங்குஞ்செவ் வாய்ச்சி மணிகறங்கு
மானண்டர் வேயிசை கேட்கப் பொருளணை வாய்கவைத்த
கானண் டளையினி னத்தீனு முத்தினைக் காமரன்னந்
தானண்ட மென்றணைக் கும்மறைக் காட்டுறை சங்கரனே.

(இ-ள்.) அண்டருண்டி - அமிர்தம். ஆன் அண்டர் - பசுக்களைக் காக்கும் இடையர். வேயிசை - வேய்ங்குழலிசை. கால் நண்டு - காலினையுடைய நண்டு. அளை - புற்று. நத்து - சங்கு. அண்டம் - முட்டை. (௬௫)

சங்க மடங்கலை சூழ்மறைக்காடன் றடஞ்சிலம்பிற்
றுங்க மடங்கலை யன்னான் புரியுஞ்சொற் சூதை யெண்ணேன்
பைங்க மடங்கலை நேரும் புறவடிப் பார்வைதக்கோர்
சிங்க மடங்கலை கற்பாரென் னூர்பொற் சிலைநுதலே.

(இ-ள்.) சங்கம் அடங்கு - சங்குகளடங்கிய. அலை - கடல். மடங்கல் - சிங்கம். சொற்சூது - சொற்கபடம். கமடம் - ஆமை. கலை - மான். மடம் சிங்க - அறியாமை குறைய. கலை - கல்வி. (௬௬)

சிலைக்கோடு மேல்வைத்தகோற்றே னுடைந்ததண்டேறல்வயற்
றலைக்கோடு வேத வனப்பெரு மான்மலைச் சங்கரிதன்
முலைக்கோடு பட்ட தழும்பான் சடில முடிமணியாங்
கலைக்கோடு வெண்பிறை பைச்செங்கை கூப்புதி கார்மயிலே.

(இ-ள்.) சிலை கோடு - மலையின் கொடுமுடி. கோற்றேன் - கொம்புத்தேன். தேறல் - தேன். வயற்றலைக்கு - வயலிடத்து. கோடு - கொம்பு. கோடு வெண்பிறை - வளைந்த வெள்ளியபிறை. (௬௭)

காரண னோமத் தலைவே திகைமறைக் கானப்பரி
பூரண னோமத்த மானவன் வில்லிடம் பொன்வெள்ளிமா
வாரண னோமத்த வாரணங் காத்திடு மாழிப்புவி
பாரண னோமத்த வேணியைத் தாங்கிய பால்விடையே.

(இ-ள்.) ஓம் அத்தமானவன் - பிரணவார்த்தமானவர். மா - குதிரை. ஆரணம் - வேதம். நோம் - வருந்துகின்ற. வாரணம் - யானை. பாரணன் - உண்டவர். (௬௮)

பாலம் பகவன் மயிலுரை கோவியற் பாவைபங்கன்
ஞாலம் பகவன் மருப்பினிற் கீன்றிடு நாரணனுங்
கோலம் பகவ னவின்மறைக் காடன் குரூஉச்சடில
மேலம் பகவ னமையாண் டருளுவன் மேதகவே.

(இ-ள்.) அம்பு - பாணம். அகவல் மயில் - அகவுதலையுடைய மயில். உரை - சொல். கோ - கண். இயல் - சாயல். ஞாலம் பக - பூமி பிளக்க. வல் மருப்பு - வலிய கொம்பு. கோலம் - பன்றி. பகவன் - பிரமா. அம் - நீர். பகவன் - கடவுள். (௯௯)

தகர நகரமுன் னுமைந் தெழுத்தர் தறுகண்முகப்
புகர னகரத் தரவேழப் போர்வையர் பொங்கனலம்
பகர நகரத்தர் வேதங்கள் பூசித்த பான்மைபெற்ற
சிகர நகரத்த ரெற்களிப் பார்முத்திச் செந்திருவே.

(இ-ள்.) தகரநகரம்-தகரத்திற்கினமாகிய நகரம். ஐந்தெழுத்து-ஸ்ரீபஞ்சாக்கரம். புகரன - புள்ளியையுடைய. தரம் - உயர்ச்சி. அனலம் பகர் - அக்கினிக்கண்ணர். அநகர் - பாவமில்லாதவர். சிகரநகரத்தர்-கோபுரம்பொருந்திய கோயிலையுடையவர். (௧௦௦)

மறைசையந்தாதி அரும்பதவுரை முற்றிற்று.



உ

கணபதி துணை.

# மறைசையந்தாதி.

யாழ்ப்பாணத்து நல்லூர்

சின்னத்தம்பிப்புலவர்

அருளிச்செய்தது.

இஃது

ஷை நல்லூர்

## ஆறுமுகநாவலரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

இவர் மாணாக்கர்களுளொருவராகிய

மேற்படியூர், கனகசபாபதிப்பிள்ளை குமாரர்

## சதாசிவப்பிள்ளையால்

சென்னபட்டணம்

கலாநிதி யச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு.



கணபதி துணை.

# மறைசையந்தாதி.

காப்பு.

அந்தமு மாதியு மில்லா மறைசையி லத்தர்தம்மேற்
செந்தமிழ் நூற்பொரு ளந்தாதி பாடச் சிலம்பிலன்னை
யிந்தன மொன்றுதம் சுந்தரி யம்பிகை யின்றெடுத்த
சுந்தர விரகத் திச்சே தகன்றாட் டிணை துணையே.

திருவா ரணங்கு மணமகன் பூசித்த செல்வர்வெள்ளைக்
கருவா ரணங்குமி ழும்பண்ணை சூழ்மறைக் காடரிசை
மருவா ரணைக்கு நிறையாமைப் பாடுமென் வாய்க்கவிதைக்
திருவா ரணங்குசெய் புண்மூலைப் பாமயி லென்றுணையே.

என்று டலையொன்று காலனைத் தாக்கி யெழிற்கனக
மன்று டலைச்செய்து வான்பர வைப்பெயர் மண்ணுலும்விண்ணுலுஞ்
சென்று டலைக்கடை வாயிற் படியினுஞ் சேர்ந்துவரு
மூன்று டலைவைப் பதுமறைக் காட்டி லுறைபரனே.

பாமரம் பாவினைச் செம்பவ ளக்கொடி பக்கர்சுரும்
பாமரம் பானை யெரித்தார் மறைசைப் பதியர்வரிப்
பிரமரம் பாடிய பொற்கொன்றைத் தாமரைப் போதியோர்
தரமரம் பாவிநெஞ் சேவினை யாங்கருந் தாதினுக்கே.

கருந்தாதை யன்ன கயவர்தம் மீதிற் கவிதைசொல்லி
வருந்தாதை யானனன் வேதா ரணியன்வை வேற்குகனைத்
தருந்தாதை தெய்வ மணங்கமழ் சேவடித் தாமரைமேற்
பொருந்தாதை யோநினை யில்லாவென் சித்தப் பொறிச்சுரும்பே.

சுரும்பர வைக்கிசை தாமரை யோபெருந் தொல்புவியோ
கரும்பர வைக்கண் ணியலேது தூதிருட் காலமுல்லை
யரும்பர வைப்பரி லும்வா ணகையல்கு லன்னமென்ன
வரும்பர வைக்கு நடந்தார் மறைசை வரையிறையே.

வரைச்சங் கரிக்கு மணவாளர் கூடல் வளர்ந்திடுமூ
வுரைச்சங் கரிக்கு வனஞ்சூழ் மறைசையி லுத்தமநா
தரைச்சங் கரிக்கு விடப்பாணி சக்கரந் தானைதொட்ட
திரைச்சங் கரிக்குந் தெரியாப் பதநிழல் சேர்மின்களே.

மின்னஞ்சு கங்கைச் சடாதரன் சத்த விடங்கன்றிரை
வன்னஞ் சுகந்தவன் மாமறைக் காடற்கு மாதொரிராப்
பன்னஞ் சுகமென வேள்காம காண்டப் பாழியினை

தத்தலை வேலையன் காணாத வேதத் தனிவனத்து
மூத்தலை வேலையன் வெற்பினம் மாது முளரியடி
யத்தலை வேலையன் ரூட்சொரி பாலை யருஞ்சுரத்து
வைத்தலை வேலையன் பாலென்னை நாடி வரவெண்ணுமே.

வரபர சங்கர வேதா ரணிய மடங்கலஞ்சுஞ்
சரபர சங்கர ளம்பொதி வாய்விழித் தையல்பங்கி
னரபர சங்க ரவிபோ லொளியி னணிதிகழும்
புரபர சங்கர வாகம ளூர்வரும் போதத்திலே.

போத வனந்த னவிராழி விற்கதை பூட்டுசிலை
மாத வனத்தன் மறுதிக்கெட் டாத வாதனங்கி
யாத வனந்த நகுமதி மூன்றுக ளூன்பொறியார்
வேத வனத்தன் பதம்பேணிற் பாச விலங்கறுமே. ௧௦

விலங்க லரிக்குலஞ் சூழ்மறைக் காடன் விரிந்ததுழா
யலங்க லரிக்கரு மாளூரி லோர்புற் றமர்ந்திருக்கு
விலங்க லரிக்கட் களக்கறை யானைச்சற் றெண்ணுநெஞ்சே
கலங்க லரிக்குநந் தீவினை யான கருங்கலையே. ௧௧

கருங்கலை மானுமென் சித்தா சனம்புகுங் கண்ணுதலோ
னருங்கலை மானுறை வேதா ரணிய னணிவனைமேன்
மருங்கலை மாறுதிக் கண்முலை யிருங்கள் வார்தடங்கண்
பொருங்கலை மானென்று வந்ததுண் டாகிற் புகன்றிடுமே. ௧௨

புகரானை யிரு முரியானை வெண்பொருப் பானையெண்ணம்
பகரானை மேய்த்துவெண் பற்றானை யாற்கைப் பகட்டைக்கவ்வி
யகரானை யச்சுட ராழிதொட் டாற்கரி யானைமறை
நகரானை யன்றிச் சொலாதிறைஞ் சாதென்ற னுச்சிரமே. ௧௩

சிரவா விந்தம் புனைமறைச் காடத்ரி சூலங்கொண்ட
கரவர விந்தம் பணித்தோன் மலைத்தென்றற் கன்றுயிர்க
வரவர விந்த மடநடைக் கோமள வஞ்சியிரு
ளிரவர விந்த மெனக்கிடந் தாள்பின்னை யென்செய்வளே. ௧௪

செய்யரைக் கோடியன் மாவுரி யாரைச் செழுங்கனன்மான்
கையரைக் கோடி புனைமறைக் காடரைக் கண்ணிற்கண்டாற்
பையரைக் கோடிமின் னூர்மய லால்வரும் பாவமெல்லா
மையரைக் கோடி யருந்துக ளாகு மறிசித்தமே. ௧௫

சித்திர வன்னி கருங்கொங்கை பங்கர்செற் றூர்புரமூன்
றத்திர வன்னிக் கருணைகை யார்க்கிட மாகமதூன்
மித்திர வன்னியும் பூவையுங் கேட்டு வியந்துரைக்கும்
பத்திர வன்னி மாஞ்சேர் மறைசைப் பதியகமே. ௧௬

பதிகம் பரிக்குங் குழன்மாத ராயப் பரவையுள்ளே
வதிகம் பரிக்கு நிகர்விழி யாய்மலை மாதுகங்கா
ளிதிகம் பரிக்கு மணியாக ணிந்தரு ளிசர்முத்தட்
பொதிகம் பரிக்கு [illegible]

புரியா ரகந்த னறியாப் பதம்பெறப் பொற்கயிலைப்
பெரியா ரனந்தனை வெண்ணடை பாகர் பிறப்பினிலங்
குரியா ரனந்த வளமறைக் காட்டைக் குறித்திருந்து
மரியா ரனந்தன் சிரமேற் புவித்தல மானவரே. ௧௮

மானத் தரக்கரந் தைப்பட வீர்த்துரி வாங்கினர்கற்
றானத் தரக்க ரரசுடக ளூன்றிய தாளர்குடப்
பானத் தரக்கர விந்தத்தின் மேற்றுயில் பண்ணைமறைக்
கானத் தரக்கர மைந்துணர் வீர்வினைக் கட்டறுமே. ௧௯

அறுத்தவித் தாரச் சமைத்தபின் னோக்குகந் தார்பொறியங்
குறுந்தவித் தார முனிக்கருள் சோலை குமரராப்
பொறுத்தவித் தாரணி யேத்தா ரணபுரம் போந்துசரு
வறுத்தவித் தாக்குவ தல்லாது வேறு மருந்தில்லையே. ௨௰

மருக்கர வீரமின் றேநினைக் காவொன்று மன்றுறையெல்லா
முருக்கர வீர வரிவிழி யாய்கட முற்றனைவந்
திருந்கர வீரகந் திச்சே தகன்றந்தை யிர்மறைசை
யெருக்கர வார மதுமலரி வெற்பி னெறிபியன்றே. ௨௧

அன்றாலி னட்டந் துயின்றோ னிகரன்ன மேதிருமான்
பொன்றாலி நாட்டகந் தண்டார் மறைசைப் பொருப்பகத்தி
லொன்றாலி நாட்டவற் கார்போலும் வார்குழ லொண்டொடியூர்
குன்றாவி நாட்டவர் கொள்ளா ருனது குளிர்முத்தமே. ௨௨

முத்திரு மாதங்க வார்முலை பாகர் முதுமறைசை
மெய்த்திரு மாதங்க மாற்கரி யானை விளம்புகிலீர்
பத்திரு மாதங் கருவழி றூறிய பாழுடம்பை
வைத்திரு மாதங்கத் தென்றிசைக் கூற்று வருங்கடைக்கே. ௨௩

வருநர நாக மகவான் பதமும் வனசப்பிரான்
பொருநர ருகம் பிளந்தான் பதமும் புகலின்மிக்கோ
முருகர காகர் பணிமா முரகத்தன் மூவர்தமிழ்க
குருகர ருக மருங்குழை யாற்பணி யொண்டவாகமே. ௨௪

ஒண்டுதை யுண்புற வீர்மறந் தாரெம தூரர்முன்னெண்
மண்டுதை யாக்கிய சோரீந் திடமயிற் றார்வரம்பி
னண்டுதை யால்வெயில் காய்மறைக் காட்டுறை நாகமணி
வண்டுதை யோதிக்குச் செம்பாதி யாநி மணிவளைக்கே. ௨௫

மணிக்குட நாடகன் மாறன் பதாகை வரித்தருதற்
கணிக்குட னூடக வாழுமென் றுவிம்மை காயமையம்
பிணிக்குட னூடகப் பொற்கொன்றை வாயுறும் பெருமறைசை
யணிக்குட நாடக மால்பணி யாதி யரனிடத்தே. ௨௬

இடங்கர டக்கய மேனின்று கூப்பிட் டிரங்குமந்தத்
தடங்கர டக்கயங் காத்தோன் சரமனைத் தையல்கன்ம
கடங்கர டக்கய மேறுரு நான்மறைக் கான்புவனி

மேல்விண்டு நாயக னில்லார் மறைசை விமலரிடப்
பால்விண்டு வேதன் வலப்பாலு மாகப் படைத்தவர்வா
யால்விண்டு நாலிரை சுற்றுஞ் சிலம்பிக ராசனித்த
போல்விண்டு மூத்தரும் பொன்னாரென் றாற்கவிப் புன்சொல்லுமே. ௨அ

புன்றாக வேலி மறைக்காட ரன்பரைப் புண்டரிக
மின்றாக மாயனு மன்றுநான் வாசவன் மேற்பதிக்கு
மன்றாக வைப்பவர் காட்டோடு மாடு மகிழ்ந்துபுன்றோல்
பன்றாக நந்தனை பூரண தாகப் படைத்தவரே. ௨௯

படைக்கத் தரத்தர் திருமறைக் காடர் பனிவரைமே
லடைக்கத் தரத்த திறத்தா மனைமுகத் தன்னமன்றோ
டடைக்கத் தரத்த மருந்தரு ளோதிச் சுரும்பினங்கா
விடைக்கந் தரம்வரி னுங்கருங் கேட்பதி யேற்றுமே. ௩0

ஏற்றுக் கொடியார் திருமறைக் கானத்த ரேழுலகப்
பேற்றுக் கொடியத்தர் திக்காடை நாதனைப் பேணிக்கொண்டேன்
கூற்றுக் கொடியற்ற மஞ்சே யினியிக் குவலயத்தே
தோற்றுக் கொடிவரை கேதன யாதுந் தொலைந்தனளே. ௩௧

தொலைவே தனையர் கருக்குழி வாய்ப்படுந் தொல்லைச்சென்ம
மிலைவே தனையென் றுழலூசல் போல நினையுநெஞ்சி
னிலைவே தனைய வொருகாலந் தேலென் றுரைக்கினென்றாய்
கலைவே தனையன் பணிமறைக் காடவென் கண்முனின்றே. ௩௨

கண்ணைச் சிராக வரிருமுங் காமறைக் காடர்செந்தீ
வண்ணைச் சிராசல மேருவில் லாளி வரைவிடுத்தே
நுண்ணைச் சிராக விழிக்கால வேலுறை விட்டுவிட்டுப்
பெண்ணைச் சிராள்வல வாவிறங் காது பிடியன்னமே. ௩௩

அன்னம் பலவ நறும்புன்னைச் சேக்கை யமர்மறைசை
முன்னம் பலவன் முடித்த சடாதர மூர்த்திதில்லைப்
பொன்னம் பலவன் பிறைநிகங் காளன் புராந்தகன்சீர்
வன்னம் பலவன் பசுபதி நாதனென் வான்றுணையே. ௩௪

வானப் பிறையையும் வாடைப் புலியையு மையல்செய்யுந்
தேனப் பிறையையுந் தென்றலை யுங்கண்டு சில்லரிக்கண்
மீனப் பிறைக்கு மடமானை மேவிலர் வேடனிடு
மூனப் பிறைச்சிக் குகந்தார் மறைசை யுகந்தவரே. ௩௫

உகந்தா வடிக்கு மிடையர்தம் பாலனை யுண்டுகடற்
சகந்தா வடியானுங் கெட்டாத ஞானத் தலத்துமுத்திச்
சுகந்தா வடிதமிழ் நான்மறைக் காட துணைவரியம்
கந்தா வடிசெல் குழையாண் மருவிய பாகத்தனே. ௩௬

ராக னகனி மொழியா யுனது பனிமுகமாங்
கோக னகநில வுந்துணைப் பானலிற் கோடல்கண்டே
நக நகநிரி ரும்புலிப் பாகரு நாடவனறு
ராக னையிலை மன்றுடி வேத வனமலைக்கே. ௩௭

மலைக்கார் முகந்தர யானைப் பழிமொழி மான்குறையா
நிலைக்கார் முரமடி யானைப் பகமனை யாமறை காய்க்கந்திச்சுரு
முலைக்கார் முகந்திடும் வேதா ரணிய வருந்துயராந்
தொலைக்கார் முகதரி யேன்சொல்லு வேனென்ன சொன்னதிலே. ௩௮

சொன்னச் சிலம்பு குழைக்கவில் லான்கழு கிப்பரியான்
வன்னச் சிலம்பிக் கரசளித் தான்வெற்பின் மானனிறைகண்
மின்னச் சிலம்பு கலைக்கலை யாமன்மெய் வேர்வரும்பச்
சின்னச் சிலம்படி யாய்குடைத் தாயொரு தேன்சுனையே. ௩௯

தேன்றநும் பிக்குளிர் தாமரைப் பிடிகைச் செல்வனும்வாய்
நான்றநும் பிக்கருண் மாயனும் வான்புவி நண்ணியநுங்
கின்றநும் பித்தவ ராற்கிட்டு மோவிடை யீறுலக
மென்றநும் பிக்குழல் சேர்மறைக் காடனிரண்டையுமே. ௪௦

இரண்டடங் ககரங் கிருந்தன்ன பார்வை யிணைக்கரும்பார்
புரண்டடங் ககர மனவிய கோதையைப் பொன்வில்லைத் தார்
முரண்டடங் ககரனை வேலா கடற்றிரை முத்தகச்சாங்
குரண்டடங் ககர வெழிமறைக் காடன் குளிர்கிரிக்கே. ௪௧

கிரிதா ரணைய வளிக் காலென்ன முத்தங் கிடந்தகொங்கை
யரிதார மன்னவ ளம்பாங் காட்டு மருக்கன்மதி
யெரிதார வெற்பு விழியா சனத்த னெழின்மறைசை
விரிதா ரகப்பொரு ளானே னுகந்தவன் மெய்யொளியே. ௪௨

மெய்த்துதி யான பணியா பரணன் விரைமருவுங்
கொத்துதி யானஞ் செறிமறைக் காட்டுறை கோனையெண்ணிப்
பொய்த்துதி யானம் புறஞ்செருக் கற்றுப் புலனடங்க
வைத்துதி யான சமாதிசெய் வார்க்கில்லை வன்பிறப்பே. ௪௩

வன்போ தகவல் லியகெடுங் கான்சென்று மாப்படம்பி
னென்போ தகவல் லியமா தவம்புரிந் தேனினைப்பிர்
பொன்போ தகவல்லி யன்பார் சுருதி புரத்தபத்த
ரன்போ தகவல்லி யங்கொன்றை யாயென் றறைந்திடுமே. ௪௪

அறைக்கண் டவழரு விக்கிரி வேத வனத்தண்ணிறே
மறைக்கண் டரிய பிரானிறந் தானைப்பொன் மானைத்துய்த்துப்
பிறைக்கண்ட வேணியிற் பாணியும் பாணியிற் போர்மழுவுங்
கறைக்கண்ட முந்தரச் செல்லுதல் பார்த்தி கருங்குழலே. ௪௫

கருமந் திரிகர ணம்வேறு மாறு கயவர்ப்பற்றித்
தருமந் திரியு மெனையாள்வை யோவெற்றித் தானவர்தம்
பெருமந் திரியை யுதரத்தில் வைத்த பிரானளகை
யொருமந் திரிநண்ப னேமறைக் காட்டுறை யுத்தமனே. ௪௬

உத்தம ரத்தி யுரியார் மறைசை யொருத்தர் வெள்ளோ
லத்தம ரத்தி னிறைகங்கை வேணிய ரலெரிந்த
நத்தம ரத்தி முரசான் செழுங்கலை நல்கமுன்னாள்
வைத்தம ரத்தின்மெய்த் தூரில்வெந் நீர்விடு மங்கையரே. ௪௭

மங்கல மந்தர முன்னாக நின்கண்ட வண்ணங்கண்டு
சங்கல மந்தர வங்கொண்டு கூனிச் சுரிமுகஞ்சார்ந்
திங்கல மந்தர மத்தான் கையிற்புந் திருந்ததுநா
கங்கல மந்தர தம்புவி யான்மறைக் கானமின்னே. ௪௮

கானவண் டானக் களிற்றைவர்க் காகக் கழுவிற்றங்கு
மானவண் டானது காணாத தாமரை யாளுஞ்செவ்வி
ஞானவண் டானத் துறைவோனும் வாவிரி னுடிக்கொத்து
மீனவண் டானத் திரிமறைக் காட்டுறை வித்தகனே. ௪௯

வித்தந் தியாக முதலா வுலோபர்க்கு விண்டிற்சொற்பாட்
டைத்தந் தியாக பதியென்ப ரான்முத லாம்பிள்ளையை
மைத்தந் தியாகப் பெறுமறைக் காடர் வயங்குமுண்மைச்
சித்தந் தியாகத் தியாகனைப் பாடிலர் தீங்கறவே. ௫0

தீங்கரும் பாரஞ் சொரிவயல் வேதத் திருவனத்துக்
கோங்கரும் பார மணிமுலைச் சாமளை கோமளப்பெண்
பாங்கரும் பாரண் ணுலாயு தாவிப் படிவச்சுமை
தாங்கரும் பார மினிப்பிற வாமுத்தி தந்தருளே. ௫௧

தந்தம் படைத்த களிறென்று தாக்கத் தளிபுரந்து
நந்தம் படைத்தலை வேல்விழிக் கன்னியை நோக்கியகா
னந்தம் படைத்தலைச் சால்வழி யூர்ந்திடு நான்மறைசை
யிந்தம் படைத்த சடையான்வெற் பாடவ ரெண்ணிங்கமே. ௫௨

சிங்க முருக்குவன் றென்கால னாவியைச் செப்பிலின்னே
சங்க முருக்குர னுய்விருந் துண்ணக் கனத்திடுமென்
னங்க முருக்கும் பிணியங்கு மிங்கு மலையவைத்தாய்
பங்க முருக்கிதழ் சேர்மறைக் காட்டுறை பண்ணவனே. ௫௩

பண்ண முதலையின் சொல்லிபங் காளன் பகைவிடம்வன்
கண்ண முதலையி னேமியை யேவிய கண்ணனுமி
ருண்ண முதலையின் றேன்மறைக் காடனை யுண்டென்பதே
யெண்ண முதலையின் காளிடைப் பூவி யினிநெஞ்சமே. ௫௪

நெஞ்சத் திருக்கு மதிநீயைம் பூத நிலையமுநீ
கஞ்சத் திருக்கு மரிசேருங் கண்ணனெண் கண்ணனுநீ
வஞ்சத் திருக்கு மலமாயை நீங்கிய மாதவத்தோர்
தஞ்சத் திருக்கு வனத்துறை காரண தற்பரனே. ௫௫

தற்கோல மென்ற கனிவாயை வேட்டுத் தயங்குமணப்
பொற்கோல மென்றடி யேன்காண் குவன்புவி புக்கிடந்த
முற்கோல மென்றவி சம்புயன் போகி முதலமரர்
நிற்கோல மென்ற பொழுதால முண்ட நிருமலனே. ௫௬

நிருமல ரஞ்சனை சேப்பணி மாலத்தர் நீள்விசயற்
பொருமல ரஞ்ச நயந்திடும் வேத புரிவரைக்கோன்
மருமல ரஞ்சனை யன்னார் மழுர்சொல் வருவர்வன்கண்
ணருமல ரஞ்சனை யாதொழி யாய்மதி யாய்மனமே. ௫௭

மனக்கார்கை மூவர் தமிழ்க்குயில் வாணியை வைத்தருமை
புனக்காக்கை வந்த வினையேன்புன் மொழி யுரைத்ததமிழ்
வினக்காக்கை வாயி னுமுங்கூறற் சொல்லொக்குஞ் செல்வமுநிம்சங்
தனக்கார்க்கை நீட்டு மறைக்காட்டில் வாழ்சிவ சம்பாமே. ௨௮

சம்பாதி யந்தச் சடாயுவும் போற்றுந் தலைவன்புரம்
வெம்பாதி யந்த மிலாமறைக் காடன் விளைக்குறல்சேர்
செம்பாதி யந்தன் சமயமல் லாது நிரிகெந்தமே
நம்பாதி யந்தர் பொல்லாச் சமயங்க ளானதெனவே. ௨௯

நன்றென் புலமைக்கில் வாயொன்று மேகலை யாயிறைந்துசீர்
மின்றென் புலவு சறையார்க்கை நந்துசுறன் மின்பொதியக்
குன்றென் புலவர்முன் றேர்கவி யாயினுங் கூறியதால்
வன்றென் புலவனைத் தாக்கிய வேத வனத்தனையே. ௩௦

வனக்கோதை யோடு மறுகா றுவைத்துவண் டேன்பிறிந்த
கனக்கோதை யெனளித் திர்கரும் பாட்டிய கட்டுகல்கா
தெனக்கோதை வாரித் திருவே மடிமலி யொன்றுமிற்வீற்
பனக்கோதை பால்விடுத் தான்மறைக் காடன் பனிவரைக்கே. ௩௧

பனிச்சந் திரனணி வேணியுந் தாங்குஞ்செம் பஞ்சினுட
னனிச்சந் திரனன்னத் தூவியிற் சேக்குமஞ் சிறடியாற்
றனிச்சந் திரவி னடந்தான் சிகர தளம்பொலிமே
இனிச்சந் திரவரை வில்லான் மறைசையிற் செந்துருவே. ௩௨

உருப்பவ ரைசன வாய்த்தேரை யிற்பிணிக் குன்றுடைத்தேவர்
கருப்பவ நாச நதிமணி கன்னிகைக் கான்மறைசை
செருப்பவ முசன காதியர் தேசிக மீன்பதுமத்
திருப்பவ முசனப் பாற்கட லான்பணிந் தேத்திறையே. ௩௩

எத்திரப் பாண்டி யெனவைய மேற்று மிறைவன்மதிக்
கோத்திரப் பாண்டிய னிமன் னுண்டவன் கோலங்கைக்
காத்திரப் பாண்டின் மறைக்கா டனைமலக் காயமென்னுந்
தூத்திரப் பாண்டி பிறுமிறுங் காலுந் தொழுமுன்னமே. ௩௪

முன்றுவ லாரிசை யுங்கூடற் சங்கர் முகியவெள்ளி
நன்றுவ லாரியன் மாமறைக் காடர் நயங்கொள்பச்சை
மின்றுவ லாரிவ ரைக்கான வேண்டும் விழிசதப்பத்
தென்று வலாரி படைத்தா னவையு மிமைப்பிலவே. ௩௫

இமையாத வம்பகர் சூழ்மறைக் கானத் திறைவகங்கைச்
சுமையாத வம்பக வன்செயச் சென்னி துளக்கரனே
கமையாத வம்பகல் விசிய வாரிதிக் காசினியோ
ருமையா தவம்பக ரார்வேட னெச்சிலை யுண்டதற்கே. ௩௬

உண்டலத் தானையன் பின்வந்த வண்டின முதுந்துறாய்க்
கொண்டலத் தானைய னஞ்சுடர் மூன்றையுங் கொண்டமுக
மண்டலத் தானையன் கொண்டாடும் வேத வனத்தன்சிறு
கண்டலத் தானையன் றீருரி வாங்குங் கருணையெற்கே. ௩௭

எம்பதங் கன்று வளர்சோம னங்கி யிவர்செய்கையா
லிற்பதங் கன்று திருமறைக் காட னிறைவைகுண்ட
நற்பதங் கன்று நிரைமேய்ந் தவற்கரு ளாதன்பெண்பாற்
சிற்பதங் கன்று மெனச்சென்ற தூதன் செயல்வண்ணமே. ௬௮

வண்ணவெண் கண்ணன் மறையா னுறைமறைக் காட்டிறைவர்
திண்ணவெண் கண்ணன் மதமாத் திரியுஞ் சிலம்பகம்பூ
வண்ணவெண் கண்ண னணையே நிதம்ப முயர்சுருதிப்
பண்ணவெண் கண்ணன் மனையே முகநண்ப பைந்தொடிக்கே. ௬௯

தொடிப்பாணி நித்திரை யாகாளென் காதிற் றூளக்குமட்டோ
கொடிப்பாணி னித்தில தென்னும் விழுமழு நோம்பிவாய்
வொடிப்பாணி நித்தில மையோ சுடுமென்னும் வேதவன
முடிப்பாணி நித்தியப் பெம்மான் பவனி முறையிற்கண்டே. ௭௰

கண்டங் கடுத்தவி ராமாலை வேதன் சுழித்ததலை
முண்டங் கடுத்த மிசைந்திடும் வானின் முளைத்தபிறைத்
துண்டங் கடுத்த நுதலிம யாசலத் துய்யபச்சைப்
பெண்டங் கடுத்தது பார்மறைக் காட்டுறை பேரொளிக்கே. ௭௧

ஒளியா னிறையுந் திவாகரக் கண்ண னுலகத்துயி
ரளியா னிறையுந்தி யம்புயன் வேதற் கருந்தின்மய
வெளியா னிறையுந்தி முந்நீர் மறைசையில் வெற்பணங்கே
தெளியா னிறையுந் தினைத்தங் கிரேன்வந்து சேருவனே. ௭௨

சேரு வரிக்கடை யாளமில் லாவுருச் சித்தசர்போ
லாரு வரிக்கடை பேறிப்ப ராலணங் கேசெழும்பூந்
தாரு வரிக்கடை பண்பாடும் வேதத் தலத்திறைமுந்
நீரு வரிக்கடை வெங்காள போசன னீண்மலைக்கே. ௭௩

நீண்ட வராக மலைமா நிலங்கிண்டி நின்றறியா
தாண்ட வராக மலைகுனித் தான்மறை நற்பதியான்
மாண்டவ ராக மலையாமல் வைப்பவன் வான்புகழை
வேண்டவ ராக மலைக்குமுன் றேன்றும் வெறுந்தெளவையே. ௭௪

வெறும்பத்தி நிச்சய மில்லேனை யாட்கொண்டு வீட்டில்வைப்பா
யுறும்பத்தி னிற்பத்து மாமகன் மாலய னும்பருக்கு
மெறும்பத்தி நிற்குங் கடைமுத லாவி யெவைக்குமருள்
பெறும்பத் தினிபங்க னேமறைக் கானப் பெருஞ்சுடரே. ௭௫

பெருங்கா சினித்தலங் கொண்டாடி யாடிப் பிறங்குசங்கை
யருங்காசி நித்த ராறைவோர் மறைசை யமலர்வெற்பின்
மருங்காசி னித்தலை கொள்ள விடாதென்ன மார்பகத்தே
பெருங்காசி னித்தகைப் பூண்கொங்கை மங்கைக்குப் பாரித்ததே. ௭௬

பாரிக்கு மார முலையுமை யாட்கும் பரிசிரியா
நாரிக்கு மாரப் புரமுஞ் சிரமு நயந்தளித்தான்
மூரிக்கு மாரனைத் தந்தான் மறைசையின் மூர்த்திநந்தான்
[illegible]

சாதிப்ப ராசம மென்பயன் வேட்டுவெஞ் சாதிப்புழு
வேதிப்ப ராசம் பெறல்போல மெய்க்குரு வாற்பெற்றியான்
புதிப்ப ராக மணிக்தன்ப ரைவதெப் போதருளா
யாதிப்ப ராகவி ஞன்மறைக் காவத்தெ னம்பரனே. ௭௮

புயற்கூடு போம்பொழில் வேதா ரணியன்பொன் னுட்டகத்தே
மயற்கூடு மாடவர் காரிய ராருயிர் வாரியுண்ணு
முயற்கூடு தாக்க விருக்கூ டுடையு முடிச்சிலம்பா
கயற்கூடு கண்ணிடை யாகாசக் கிட்டுதல் கைக்கரிதே. ௭௯

அரிதிரி கைக்கு வடிவாழ் மறைசை பரன்வருமை
பெரிதிரி கைக்குவந் தாண்டான் மெய்ஞ்ஞானம் பிறங்குசுடர்
விரிதிரி கைக்கு வினையேவிடத்தில் விளங்குமட்சக்
கிரிதிரி கைக்கு நிகராம் பிறப்புங் கெடுவிப்பனே. ௮௦

கெடுப்போ னகங்கையை நான்முகன் கேசவ னார்க்குமுண்டோன்
கடுப்போ னகங்கையற் பங்கில்லைத் நான்மறைக் காணுவந்தா
னடுப்போ னகங்கை யுடையான் சிலம்பினம் மாதையொப்பாய்
வடிப்போ னகங்கை மணிமுலை நின்குறை மற்றிலையே. ௮௧

மற்றலத் தேரைய மின்றிகெஞ் சேயென்ன மாயங்கொல்லோ
முற்றலத் தேரை விடுஞ்சாலிற் சங்க முழங்கு பண்ணைப்
பொற்றலத் தேரை மறைமறைக் கானப் புனிதன் கல்லுட்
பற்றலத் தேரைக்கு மேயளந் தானெப் படிப்படியே. ௮௨

படிகந் தனையனை யான்மறைக் காடன்பொற் பாணியில்வேல்
பிடிகந் தனையரு டாதைய னைடகப் போவனைக்
கடிகந் தனைமுடில் காணுனை யேத்தக் கருதுநெஞ்சே
விடிகந் தனைய மடவார் கலக விழிமையலே. ௮௩

மையகற் றனை முகன்றனை மாலரிக்க வாசகனை
மெய்யகற் றனை மகிழ்மறைக் காடனை வேண்டியுன்னுஞ்
செய்யகற் றனைமுக் கோலந்த வீர்சுரஞ் சென்றனரோ
துய்யகற் றனைப் புரந்தானன் றுனுநந் தோகையுமே. ௮௪

தோகை பிராமன் மதன்பாண மங்கந் தொளைத்தநுகா
ரீகை பிராமன் விதிகற்ப மானதென் மீதிற்சற்று
மோகை பிராமன் மறந்தா ரிராவண னுட்கவென்ற
வாகை பிராமன் பணிமறைக் காடர்வந் தாரில்லையே. ௮௫

வங்கித்திக் குங்கணை யுங்கொண்ட வேள்பணி மான்குழற்கா
டுங்கித்திக் குங்கனி வாயும்வெண் மூரலு மொண்குழையும்
பங்கித்திக் கும்பெறத் தோன்றிய வேதப் பதியன்பொற்று
ளங்கித்திக் குந்தகு மென்னமன் றுடு மரன்கிரிக்கே. ௮௬

அரம்பையங் காட்டக வேதா ரணியத்த னைவியச்சுக்
குரம்பையங் காட்டவல் லான்சித்த சித்தன் குருஉச்சடில
சிரம்பையங் காட்ட வணிந்தோ னரவிந்தச் சேவடியன்
பாம்பையங் [illegible] ௮௭

பறக்கும் பருந்துவக் குங்காழி யூன்றுடைப் பற்றுளதா
மிறக்கும் பருந்துவக் காக்கையை நீக்கி மினிப்பொதியா
வறக்கும் பருந்து தமிழ்மறைக் காட னறுகோக்கொண்டு
துறக்கும் பருந்துடித் தற்கரி தாமுத்தித் தொல்கதவே. ௮௮

எதுவாயு நீரங்கி மண்காய மான கடவுளென
யுதவாயு மப்பனு மானவன் வேத முறைவனைத்தான்
பதவாயு தக்கொடி வேடாதை கீர்த்தியைப் பாடுதற்குச்
சுதவாயு நாவுந்தந் தானில்லை யாணி தலைமகனே. ௮௯

மார சலந்தர னந்தரு வேத வனத்துறைய
சிகர சலந்தர னுவியுன் டாயடல் சேர்க்கிலங்கு
முகர சலந்தர வாலாச னுவரி யங்கையொழ்றைப்
புகர சலந்தரப் போர்த்தா னெனவினை பொன்றிடுமே. ௯0

பொன்றுதை யம்புயத் தின்கால னஞ்சிப் புரண்டுவிழ
நின்றுதை யம்புயத் தான்மறைக் காட னிருள்வெற்பினி
லொன்றுதை யம்புயங் கன்வாய் விழுங்கிய தோமணித்தே
ரென்றுதை யம்புயன் முடிய தோகின் றியம்பிடுமே. ௯௧

இயக்கோடை யாம்பன் முகருந்த னைத்து மிறைவண்டு
முயக்கோடை யாம்பன் மலர்மறைக் கான்முத லைகருதிச்
சயக்கோடை யாம்பன்முத் தேயடி யேன்சட் டகம்விடுகாண்
மயக்கோடை யாம்பன் மருந்தேமின் பார்வை வழங்குதியே. ௯௨

குதிக்குஞ் சிதரிக் கட்கயற் பாவை கொழுநன்மன்றிற்
சதிக்குஞ் சிதடக் தான்சொன்றை மாலை தவழ்குழவி
மதிக்குஞ் சிதங்கிய வேணியன் வேத வனத்தலத்தி
லுதிக்குஞ் சிதலை யெறும்பாதி பேற்றை யுரைக்கரிதே. ௯௩

உரைத்தென்ன வண்மை பரன்மறைக் காலுறை யோங்கன்முதி
னிரைத்தென்ன வன்மயி லூங்குழலா னைஞ் செனும்மிரும்பைக்
கரைத்தென்ன வன்னைப் பூண்மார்பஞ் சேரக் கருதுபொதி
வரைத்தென்ன வன்கொடி சாடிய வேல்விழி வாணகையே. ௯௪

வானண்ட நண்டி வழங்குஞ்செவ் வாய்ச்சி மணிசுறங்கு
மானண்டர் வேயிசை கேட்சப் பொருளினை வாய்கவைத்த
கானண் டளாயினி னத்திறு முத்திலைக் காமரன்னத்
தானண்ட மென்றனைக் கும்மறைக் காட்டுறை சங்கரனே. ௯௫

சங்க மடங்கலை சூழ்மறைக் காடன் றடஞ்சிலம்பிற்
றுங்க மடங்கலை யன்னார் புரியுஞ்சொற் சூதையெண்ணேன்
பைங்க மடங்கலைப் பொற்றுட் புறவடிப் பார்வைதக்கோர்
சிங்க மடங்கலை கற்பாரென் றூர்பொற் சிலைநுதலே. ௯௬

சிலைக்கோடு மேல்வைத்த கோற்றே னுடைந்தசெந் தேறல்வயற்
றலைக்கோடு வேத வனப்பெரு மான்மலைச் சங்கரிதன்
முலைக்கோடு பட்ட தழும்பான் சடில முடிமணியாங்
[illegible] ௯௭

காரண னேமத் தலைவே திகைமறைக் கானப்பரி
பூரண னேமத்த மானவன் வில்லிடம் பொன்வெள்ளிமா
வாரண சோமத்த வாரணங் காத்திடு மாழிப்புலி
பாரண னேமத்த வேணியைத் தாங்கிய பால்விடையே. ௯௮

பாலம் பகவன் மயிலுரைக் கோவியற் பாவைபங்கன்
ஞாலம் பகவன் மருப்பினிற் நின்றிடு நாரணனுங்
கோலம் பகவ னவின் மறைக்காட்டன் குருஉச்சடில
மேலம பகவ னெமையாண் டருளுவன் மேதகவே. ௯௯

தகர நகரமுன் னைமந் தெழுத்தர் தறுகண்முகப்
புகர நகரத் தரவேழப் போர்வையர் பொய்யானலம்
பகர நகரத்தர் வேதங்கள் பூசித்த பான்மைபெற்ற
சிகர நகரத்த ரொற்களிப் பார்முத்திச் செந்திருவே. ௧௦௦

மறைசையந்தாதி முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

## ஆக்கியோன்பெயர்.

செந்தா தியன்மணிப் பூண்புலி யூரற்குச் சேர்ந்தளித்த
சிந்தாத் தியானஞ்செய் வில்லவ தாசன் றிருப்புதல்வ
னந்தா வளந்திகழ் நல்லைச்சின் னத்தம்பி நாவலனி
ரந்தாதி மாலையை வேதாட வீசற் கணிந்தனனே.